


# நாளுக்கு நாள் அதிக தெளிவானதும் அழகானதுமான சருமம்





ரெக்ஸோனுவிலிருக்கும் 'கேடில்' உங்கள் சருமத்திற்கு புது ஆரோக்கியமும் எழிலும் தரும்

## ரெக்ஸோனு

'கேடில்'* கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்தை மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர் இது.

RP. 71-X53 TM

ரெக்ஸோனு ப்ரோப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரிக்கப்பட்டது

# பொருள் அடக்கம்

கல்கி


மலர் 11 | 1951 நவம்பர் 4 | கர ௵
இதழ் 14 | | ஐப்பசி 18உ




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# சர்ச்சிலின் திகைப்பு!



① "ஆ! விடா முயற்சியினால் வெற்றி பெற்றேன்!"
② "முதலில் இந்தியாவுக்குப் போய் ஒருவரை பார்க்கப் போகிறேன்!"
③ "அடடா! நேருவிடம் தர்மச்சக்கரம் அல்லவா இருக்கிறது!"
④ "...பாரசீகத்திலோ பெட்ரோலுக்குத் தொட்டு நெருப்பை வைக்கிறார்கள்!"
சர்ச்சில்
⑤ "எகிப்திடம் யார் நெருங்க முடியும்?.."
⑥ "மீண்டும் மும்மூர்த்திகளில் ஒருவராக வேண்டியதுதான்."
"சர்ச்சில்! உங்களுக்கு இடமில்லை;
வேண்டுமானால்

கல்கி

மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 14

# அதிர்ஷ்டம் மடியில் குதித்தது!

பிரிட்டிஷ் கன்சர்வேடிவ் கட்சியின் உப தலைவரான ஸ்ரீ அந்தோனி ஈடன் இருக்கிறார் அல்லவா? அவர் சில வாரங்களுக்கு முன் விமானத்தில் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

அப்போது ஸ்ரீ ஈடன் கண்களை மூடிக் கொண்டு அரைத் தூக்கத்தில் இருந்தார். அவர் மடிமீது திடீரென்று ஏதோ ஒன்று வந்து விழுந்தது. உடனே ஈடன் திடுக்கிட்டு அலறி விட்டாராம்.

ஈடன் மடியில் விழுந்தது வெடி குண்டோ அல்லது வேறு ஏதாவது அபாயகரமான சாதனமோ அல்ல.

அதிர்ஷ்டம் அவரைத் தேடிக் கொண்டு வந்து மடியில் குதித்தது!

ஆம்! அதிர்ஷ்டம் ஒரு பெரிய தோல் பெட்டி ரூபமாக அந்தோனி ஈடனின் மடியில் வந்து விழுந்தது. அந்தத் தோல் பெட்டியின்மேல் "மாட்சிமை தங்கிய பிரிட்டிஷ் மன்னரின் வெளி நாட்டு மந்திரி அவர்களுக்கு" என்ற எழுத்துக்கள் பொறிக்கப் பட்டிருந்தன.

பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரியின் விலாசத்துக்கு அனுப்பப் பட்டிருந்த ஒரு பெட்டி விமானத்தின் மேல் தட்டிலிருந்து தவறி ஈடன் மடியில் விழுந்து விட்டது.

மேற்படி சம்பவத்தைக் கன்சர்வேடிவ் கட்சியினர் ஒரு நற் சகுனமாகக் கருதி மகிழ்ச்சி அடைந்தார்களாம். அந்தோனி ஈடன் வெளிநாட்டு மந்திரியாக வரும் காலம் அதிக தூரத்தில் இல்லை என்று முடிவு செய்தார்களாம்!

அவர்கள் எண்ணியது வீண் போகவில்லை. சில தினங்களுக்கு முன் பிரிட்டனில் நடந்த பொதுத் தேர்தலில் கன்சர்வேடிவ் கட்சியினர் வெற்றி பெற்று விட்டார்கள். வின்ஸ்டன் சர்ச்சிலைப் பிரதம மந்திரியாகக் கொண்டு கன்சர்வேடிவ் கட்சி மந்திரி சபை ஏற்பட்டு விட்டது. ஈடன் உதவிப் பிரதம மந்திரியாகவும் வெளி நாட்டு மந்திரியாகவும் பதவி ஏற்றுக் கொண்டு விட்டார்.

பிரிட்டனில் ஜனநாயகம் எவ்வளவு சிறந்த முறையில் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது என்பதற்கு இந்தத் தேர்தல் எடுத்துக் காட்டாகும்.

சுமார் இருபது மாதங்களுக்கு முன் நடந்த தேர்தலில் தொழிற் கட்சியினருக்கு மற்ற எல்லாக் கட்சிகளையும் காட்டிலும் ஐந்து ஆறு ஸ்தானங்களே அதிகமாகக் கிடைத்தன. அதாவது இரண்டாவது மகா யுத்தம் முடிந்த பின் நடந்த தேர்தலில் தொழிற் கட்சிக்கு இருந்த போது ஜனங்களின் அபரிமிதமான ஆதரவு மேற்படி தேர்தலில் கிடைக்க வில்லை. தொழிற்கட்சி சர்க்கார் நடவடிக்கைகளில் ஜனங்கள் தங்களுக்கு இருந்த ஓரளவு அதிருப்தியை அவ்வாறு காட்டினார்கள்.

பல முக்கிய சந்தர்ப்பங்களிலும் தொழிற்கட்சி சர்க்காரை வீழ்த்துவதற்குச் சர்ச்சில் கோஷ்டியினர் பெரு முயற்சி செய்தார்கள். தொழிற்கட்சி சர்க்காரின் ஆயுள் மயிரிழையில் தொங்கிய சமயமும் உண்டு. சிற்சில சமயங்களில் ஒன்றிரண்டு வோட்டுகளே தொழிற் கட்சி சர்க்கார் வீழ்ச்சியடையாமல் காப்பாற்றின!

தொழிற்கட்சி சர்க்கார் தலைவர் ஆட்சி பதவி ஒன்றிலேயே நாட்டம் உள்ளவராயின், அவர் ஏதாவது தந்திரம் செய்து ஐந்து வருஷ காலத்துக்குப் பிரதம மந்திரியாகக் காலந் தள்ளி இருக்கலாம்.

ஆனால் ஜனநாயகக் கொள்கையில் திளைத்த பிரிட்டனில் அவர் அவ்வாறு நடந்து கொள்ள விரும்பவில்லை. சொற்பமான 'மெஜாரிட்டி' பலத்தைக் கொண்டு அவர் பதவியை இறுகப் பற்றிக் கொண்டிருக்க மனம் கொள்ள வில்லை. எனவே,

அவர் பார்லிமெண்டைக் கலைத்துப் புதுத் தேர்தல் நடக்க ஏற்பாடு செய்தார்.

வின்ஸ்டன் சர்ச்சிலுக்கு எழுபத்தாறு வயதாகிறது. அவரது கட்சி ஏற்கெனவே இரண்டு தேர்தல்களில் தொடர்ச்சியாகத் தோல்வியடைந்தது. அப்படி யிருந்தும் சர்ச்சில் அரசியல் துறவு பூண்டு விடவில்லை. மனோபலம் சிறிதும் குன்றாமல், மாபெரும் கட்சிக்குத் தலைமை வகித்து விடாப்பிடியாக நின்று மீண்டும் தேர்தலில் வெற்றி பெற்றுள்ளார்.

இப்போது நடந்த தேர்தலில் தொழிற் கட்சியினர் தோல்வியுற்றனர். பாரசீகம், எகிப்து முதலிய நாடுகளில் ஏற்பட்டுள்ள தகராறுகளைத் தீர்க்க பிரிட்டனுக்கு ஆற்றல் இல்லை என்பதில் பிரிட்டிஷ் பொது மக்கள் தங்களுடைய அதிருப்தியைக் காட்டியிருக்கிறார்கள்.

தொழிற்கட்சி தோல்வியுற்று, கன்சர்வேடிவ் கட்சி சர்க்கார் ஏற்பட்டதற்கு இதுதான் முக்கிய காரணமாக இருக்க வேண்டும்.

இதனால் ஜனங்களுக்குத் தாங்கள்தான் தேசத்தை ஆட்சி புரிகிறோம் என்ற எண்ணம் ஏற்படுகிறது. அவர்கள் இஷ்டப்படி சர்க்காரை மாற்றி அமைக்கும் மகத்தான சக்தி அவர்களுக்கு இருக்கிறது அல்லவா!

இப்போது நடந்துள்ள தேர்தலில் கன்சர்வேடிவ் கட்சிக்குப் பொதுஜனங்களின் அபரிமிதமான ஆதரவு கிடைத்திருக்கிறது என்று சொல்லுவதற்கில்லை. மற்ற எல்லாக் கட்சிகளையும் காட்டிலும் கன்சர்வேடிவ் கட்சிக்கு இருபத்தைந்து ஸ்தானங்கள்கூட அதிகமாகக் கிடைக்க வில்லை.

எனவே, ஏற்கெனவே தொழிற் கட்சி சர்க்கார் இருந்ததைப் போலவே கன்சர்வேடிவ் சர்க்கார் தங்களுக்குக் கிடைத்துள்ள அற்ப 'மெஜாரிட்டி' பலத்துக்கு ஆபத்து ஏற்படாமல் பாதுகாத்துக் கொள்ளும் நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது.

பிரிட்டிஷ் ஜனநாயகத்தில் உள்ள விசேஷ அம்சம் என்னவெனில், பிரதம மந்திரியைப் போல் எதிர்க் கட்சித் தலைவருக்கும் சமமான செல்வாக்கும் மதிப்பும் உண்டு.

இவ்வாறு சம பலம் உள்ள இரண்டு கட்சிகள் இருந்தால்தான் ஜனநாயகம் வளர்ந்தோங்குவதற்கு இடம் ஏற்படும்.

சர்ச்சில் உறுதியும் திறமையும் உள்ளவரானதால், இப்போது மிகவும் குன்றியுள்ள பிரிட்டனின் செல்வாக்கை மறுபடியும் நிலைநிறுத்துவார் என்று எதிர்பார்க்கலாம்.

* * *

தேர்தலின்போது பிரிட்டிஷ் தொழிற் கட்சித் தலைவர்கள் நிகழ்த்திய பிரசங்கங்களில் பொதுமக்களை ஒரு கேள்வி கேட்டார்கள்.

"தொழிற் கட்சி சர்க்கார் வேண்டுமா அல்லது மூன்றாவது உலக மகா யுத்தம் வேண்டுமா!" என்று கேட்டு வந்தார்கள்.

அதாவது வின்ஸ்டன் சர்ச்சிலைத் தலைவராகக் கொண்டு கன்சர் வேடிவ் கட்சி சர்க்கார் அதிகாரத்துக்கு வந்தால், மூன்றாவது மகா யுத்தத்தை உண்டாக்கி விடுவார்கள் என்பதே அந்தக் கேள்வியின் கருத்து என்பதை விவரிக்க வேண்டியதில்லை.

எனவே, அவ் விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டிய பொறுப்பு சர்ச்சில் சர்க்காருக்கு ஏற்பட்டிருக்கிறது.

சர்ச்சில் கட்சியினர் அதிகாரத்துக்கு வந்திருப்பதைக் குறித்து இந்தியர்கள் கவலை கொள்வதற்குக் காரணம் இல்லை.

இந்தியா சுதந்திரம் அடைவதற்குமுன் சர்ச்சிலின் போக்கு எவ்விதமாயினும், இப்போது அவரது சர்க்காரால் சுதந்திர இந்தியாவுக்குப் பாதகமோ சாதகமோ ஏற்படப் போவதில்லை.

# பத்திரமாகத் திரும்பினார்கள்!

சென்ற மாத ஆரம்பத்தில் "ருஷ்யாவில் அணு குண்டு வெடித்தது!" என்பதாக ஒரு பயங்கரச் செய்தி பத்திரிகைகளில் தடபுடலான தலைப்புடன் பிரசுரமாயிற்று. அச் செய்தி அமெரிக்காவின் ஜனாதிபதி ட்ருமன் உள்பட உலக இராஜதந்திரிகளை யெல்லாம் கலக்கி விட்டது. தமிழ் நாட்டில் உள்ள நமக்கும் மேற்படி செய்தி திகிலை அளித்தது. ஆனால் நாம் திகில் அடைந்ததின் காரணம் வேறு. தமிழ்நாட்டின் சிறந்த நடிகர்களில் இருவரும் டைரக்டர் ஒருவரும் அச்சமயம் ருஷ்யாவில் இருந்தபடியினால்தான் நாம் திகில் அடைந்தோம். அடேடே! நம்மவர்கள் அங்கே இருக்கும் சமயத்தில் இப்படி நடந்து விட்டதே என்று அனுங்க முற்றோம்.

பின்னர், விவரம் முழுதும் வெளியானதும், நம் உள்ளம் நிம்மதி அடைந்தது. ருஷ்யாவில் வெடித்த அணுகுண்டு அந்த நாட்டின் பேரில் பகைவர்கள் போட்ட அணுகுண்டு அல்ல. ருஷ்யர்களே பரீட்சார்த்தமாக வெடித்துப் பார்த்த அணுகுண்டுதான். "அமெரிக்காவைப் போல் எங்களிடமும் அணுகுண்டு இருக்கிறது; ஜாக்கிரதை!" என்று உலகத்துக்கு எச்சரிக்கை செய்வதற்காக ருஷ்யர்கள் அந்த அணுகுண்டை வெடித்துத் தீர்த்தார்கள். பாவம், எத்தனையோ கோடி ரூபாய்கள் அந்தப் பரீட்சார்த்த அணுகுண்டு வெடித்ததில் வீணாய்ப் போயிருக்கும். போனால் போகட்டும்; நமக்கென்ன வந்தது!

நமது கலைஞர்கள் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன், ஸ்ரீமதி டி. ஏ. மதுரம், டைரக்டர் கே. சுப்பிரமண்யம் ஆகியவர்கள் பத்திரமாய்த் திரும்பி வந்ததுபற்றி நாம் மகிழ்ச்சி அடைந்து அவர்களுக்கு நல்வரவு கூறுகிறோம். ருஷ்யாவின் கடுங் குளிரோ, ருஷ்யாவின் பயங்கரமான கரடியோ, அதைவிடப் பயங்கரமான போல்ஷ்விக் கொள்கையோ அவர்களை ஒன்றும் செய்துவிட வில்லை. போனது போலவே சுகமாகத் திரும்பி வந்து சேர்ந்தார்கள். "இந்தியா நமது தேசம்; காந்திஜி நமது மகாத்மா" என்ற கொள்கையுடனேயே அவர்கள் திரும்பி வந்திருக்கிறார்கள். அவர்களுடைய பிரயாண அனுபவங்களைப் பற்றி ரஸமான பிரசங்கங்களும் செய்து வருகிறார்கள்.

ருஷ்யாவின் அரசியல் சமுதாயக் கொள்கைகளில் பல கருத்து வேற்றுமைகள் இருக்கலாம். ஆனால் ருஷ்யர்கள் கலைகளைப் போற்றி வளர்க்கும் முறையை யாரும் பாராட்டாமலிருக்க முடியாது. தமிழ் நாட்டுக் கலைஞர்கள் மூவரை ருஷ்யா சர்க்கார் அழைத்து மரியாதை செய்தது தமிழ் நாட்டின் கலைச் செல்வத்தை மரியாதை செய்ததாகும்.

ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் தம்பதிகளும் டைரக்டர் சுப்பிரமணியமும் ருஷ்யாவில் பார்த்தும் கேட்டும் வந்திருப்பவை தமிழ் நாட்டில் சினிமாத் துறையில் கலை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியாயிருக்கும் என்று நம்புகிறோம்.

# அராஜகத்துக்கு இடம் கொடாதீர்!

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி மெள்ள மெள்ளப் பரவிக் கொண்டிருந்த காலத்தில் இந் நாட்டில் பல இடங்களிலும் அராஜகக் குழப்பம் மிகுந்திருந்தது. பிண்டாரிகள், தக்குகள் என்று பெயர் வழங்கிய கொள்ளைக் கூட்டங்கள் நாடெங்கும் உலாவி மக்களுக்குப் பீதியை உண்டாக்கி வந்தன. தடுப்பாரும் அடக்குவாரு மில்லாமல் கொள்ளைக்காரர்கள் யதேச்சையாகத் திரிந்து மக்களைக் கொள்ளையடித்து வந்தார்கள். பிரிட்டிஷ் ஆட்சி நிலைபெற்ற பிறகே இக்கொள்ளைக் கூட்டங்கள் பிடிபட்டு அழிந்தன.—இவ்வாறு ஆங்கிலேயர் எழுதி வைத்த சரித்திரங்கள் சொல்லுகின்றன.

மேற்கண்ட சரித்திர காலத்தை நினைவூட்டக் கூடிய இரண்டு சம்பவங்கள் சென்ற இரு வாரங்களுக்குள் இம் மாகாணத்தில் நடைபெற்றிருக்கின்றன. சென்னை நகருக்குச் சமீபத்தில் மாதவரம் என்னும் கிராமத்துக்குப் பக்கத்தில் சாலையில் வந்த மோட்டார் பஸ்களைக் கொள்ளைக்காரர்கள் தடுத்து நிறுத்தினார்கள். பிரயாணிகளிடமிருந்த பொருள்களைக் கவர்ந்துகொண்டு விட்டார்கள்.

ராணிப் பேட்டைக்குச் சமீபத்தில் நடுச்சாலையில் கொள்ளைக்காரர்கள் ஆயுதபாணிகளாக வந்து நின்று கொள்ளை அடித்துச் சென்றார்கள்.

இந்த நம்ப முடியாத நிகழ்ச்சிகள் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கின்றன. இவை பின்வரும் இரண்டு நிலைகளில் ஒன்றுக்கு அறிகுறியாகும்.

1. இம்மாகாணத்தில் சட்ட திட்டம், கட்டுக் காவல், போலீஸ் பந்தோபஸ்து முதலியவை ஒன்றுமில்லை என்கிற அலட்சிய மனோபாவத்தைச் சிலர் அடைந்திருக்க வேண்டும். அல்லது,

2. மித மிஞ்சிய வறுமைக் கொடுமையினால் "எது வந்தாலும் வரட்டும்" என்ற பயங்கர மனோநிலை சிலருக்கு ஏற்பட்டிருக்க வேண்டும்.

மேற்கூறிய இரு நிலைமைகளும் விரும்பத்தக்கன வல்ல. அரசாங்கத்தார் உடனே கவனித்துத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டியது அவசியம். இப்படிப்பட்ட சம்பவங்கள் ஒன்றையொன்று தொடர்ந்து நடக்க இடம் கொடுத்தால், அது சுதந்திர இந்தியாவைப் பயங்கரமான அராஜக நிலைமைக்குக் கொண்டுபோக இடம் கொடுத்ததாகும்.

அரசாங்கத்தின் கடமை ஒருபுறமிருக்க, இந்தகைய சந்தர்ப்பங்களில் மக்களின் கடமை என்னவென்பதையும் ஞாபகப்படுத்திக் கொள்வது நலம். நமது நாட்டிலிருந்து தைரியம், துணிச்சல் என்னும் ஆண்மைக் குணங்கள் அறவே போய் விட்டனவா! ஒரு சில மனிதர்கள் மோட்டார் பஸ்களை ஒன்றன்பின் ஒன்றாக நிறுத்திக் கொள்ளையடிக்கும் சமயத்தில் பஸ்களில் வந்த பிரயாணிகளும் மோட்டார் ஓட்டிகளும் கண்டக்டர்களும் என்ன செய்து கொண்டிருந்தார்கள்! "ஆற்றிலும் சாவு நாற்றிலும் சாவு" என்ற மனோபாவத்துடன் கொள்ளைக்காரர்களை எதிர்த்து நிற்க ஒரு சிலராவது முன் வராமற் போனதென்ன!

தைரியமும் துணிச்சலும் இல்லாத மக்களால் நாட்டின் சுதந்திரத்தை வெகு காலம் பாதுகாக்க முடியாது. "காந்தி மகான் சுதந்திரம் வாங்கிக் கொடுத்தார்; அவரே ஆவி ரூபத்தில் வந்து அதைக் காப்பாற்றிக் கொடுக்கட்டும்" என்று இருக்கப் போகிறோமா! அல்லது நாடு அராஜகப் படுகுழியில் விழாமல் பாதுகாக்க ஒவ்வொருவரும் துணிந்து முன் வரப் போகிறோமா!

# கம்யூனிஸ்ட் தேர்தல் சின்னம்

சமீபத்தில் இரண்டொரு தடவை பண்டித ஜவாஹர்லால் நேரு கம்யூனிஸ்டுகள் தங்கள் இலட்சியத்தில் காட்டும் உறுதியைப் பாராட்டிப் பேசினார். இது நம்மில் சிலருக்கு வியப்பையும் ஆத்திரத்தையும் அளித்தது. "பண்டித நேருவே இப்படிப் பேசுகிறாரே! போகிற வழி என்ன!" என்று அதிசயித்தோம்.

பண்டித நேருவைக் கம்யூனிஸ்டுகளின் நண்பர் என்று யாரும் சொல்ல முடியாது. "நேரு எங்கள் பரம விரோதி" என்று கம்யூனிஸ்டுகள் சொல்லுகிறார்கள். நேருவின் ஆட்சியில் ஆயிரக் கணக்கான கம்யூனிஸ்டுகள் சிறைப்பட்டிருந்தது உண்மைதானே! கம்யூனிஸ்டுகளின் பலாத்கார நடவடிக்கைகளுக்குப் பண்டித நேரு பரம விரோதி என்பதில் சந்தேகம் இல்லை.

ஆயினும் கம்யூனிஸ்டுகளின் இலட்சியப் பிடிவாதத்தை நேருஜி ஏன் பாராட்டிப் பேசினார் என்று கேட்டால், அந்தக் கேள்விக்கு விடை இன்று சென்னை நகரின் பல இடங்களிலும் சுவர்களிலே பார்த்தால் தெரிய வரும்.

எத்தனையோ கட்சிகளுக்குத் தனித் தனித் தேர்தல் சின்னங்கள் அளிக்கப் பட்டிருக்கின்றன. மாபெரும் காங்கிரஸுக்கும் தேர்தல் சின்னம் தரப்பட்டிருக்கிறது. இரண்டு மாடுகள் பூட்டிய நுகத்தடி அல்லது நுகத்தடியில் பூட்டிய இரட்டை மாடுகள் காங்கிரஸின் சின்னம். இந்தச் சின்னத்தைப் பிரபலப் படுத்துவதற்குக் காங்கிரஸ் வாதிகள் இதுவரையில் பிரசாரம் தொடங்கவில்லை.

ஆனால் கம்யூனிஸ்டு கட்சியின் தேர்தல் சின்னமாகிய அரிவாளும் கதிரும் அடங்கிய சித்திரம் சென்னை நகரின் பல இடங்களிலும் சென்ற வாரத்தில் தீட்டப்பட்டு விளங்குகிறது.

காங்கிரஸ் வாதிகள் அபேட்சகர்கள் நியமன சச்சரவில் முழு மனதுடன் ஈடுபட்டிருக்கிறார்கள்.

கம்யூனிஸ்டு கட்சியின் சார்பாக அபேட்சகர்கள் இன்னும் நியமிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் கட்சியின் சின்னம் என்னவென்பதை அனைவரும் அறிய வெளியிட்டுப் பிரசாரம் செய்யத் தொடங்கி விட்டார்கள்.

அதாவது கம்யூனிஸ்ட் கட்சிக்கு அபேட்சகர் யார் என்பதைக் காட்டிலும் இலட்சியமும் சின்னமும் பிரசாரமும் முக்கியம் என்று ஆகிறது.

காங்கிரஸ் தலைவர் நேரு "கம்யூனிஸ்டு கட்சியில் இலட்சியப் பற்று அதிகம் இருக்கிறதே! காங்கிரஸில் இல்லாமற் போய் விட்டதே!" என்று சில சமயம் வாய்விட்டுச் சொல்லி வருத்தப் படுவதில் வியப்பு என்ன இருக்கிறது!

சென்னை நகரில் உள்ள சுவர்கள் எல்லாம் அதற்கு இன்று சாட்சி சொல்லுகின்றனவே!




அத்தியாயம் 43

## "நான் குற்றவாளி!"

"சமுத்திர குமாரி! உனக்கு என்ன நினைவிருக்கிறதா?"......

பொன்னியின் செல்வ! இது என்ன கேள்வி! யாரைப் பார்த்து 'நினைவிருக்கிறதா?' என்று கேட்கிறீர்கள்? ஆயிரமாயிரமாயிரம் ஆண்டுகள் கலந்து பழகிய பின்னர் 'நினைவிருக்கிறதா?' என்று கேட்பது தகுமா? அல்லது தங்களுக்குத்தான் நினைவில்லாமல் போய் விட்டதா? எத்தனை நாள், எத்தனை யுகம் என்னுடைய சின்னஞ்சிறு படகில் தாங்கள் ஏறி வந்திருக்கிறீர்கள்? கடலில், முடிவில்லாத கடலில், எல்லையில்லாத வெள்ளை அலைகளுக்கிடையில், நாம் இருவரும் என் சிறு படகில் ஏறிக் கொண்டு உல்லாச யாத்திரை செய்ததையெல்லாம் மறந்து விட்டீர்களா? திடீரென்று நாலாபுறமும் கரிய இருள் சூழ்ந்து வர, நாம் இருவரும் ஒருவருக்கொருவர் துணையாக, ஒருவர் கரத்தை ஒருவர் பற்றிக்கொண்டு நெடுங்காலம் நின்றதை மறந்து விட்டீர்களா? பயங்கரமான புயற்காற்று அடித்தபோது, மலைமலையாக எழுந்த பேரலைகள் நம்முடைய படகைத் தாக்கி, ஒருகணம் நம்மை வான மண்டலத்துக்கு உயர்த்தி, மறுகணம் பாதாளத்தில் அமுக்கி, இப்படியெல்லாம் அல்லோலகல்லோலம் செய்த நாட்களில், நாம் இருவரும் ஒருவருக்கொருவர் ஆதாரமாக நின்று அக்கொடும் புயலை எதிர்த்து வென்றதை மறந்து விட்டீர்களா? ஒருசமயம் நாம் வான வெளியில் பறந்து பறந்து பறந்து சென்று கொண்டிருந்தோமே, அதை மறந்து விட்டீர்களா? விண்மீன்களைத் தாங்கள் தாவிப் பிடித்து என் தலையில் ஆபரணங்களாகச் சூட்டினீர்களே, அதுவும் மறந்து விட்டதா? பூரண சந்திரனை என் முகத்தருகிலே கொண்டுவந்து, 'இதோ இந்த வெள்ளித் தகட்டில் உன் பொன் முகத்தைப் பார்!' என்று சொல்லிக் காட்டினீர்களே, அதையும் மறந்து விட்டீர்களா? மற்றொரு சமயம் ஆழ் கடலிலே தாங்கள் மூழ்கினீர்கள்; நான் உள்ளம் பதைபதைத்து நின்றேன்; சற்று நேரத்துக்கெல்லாம் இரண்டு கைகளிலும் முத்துக்களையும் பவழங்களையும் எடுத்துக்கொண்டு வெளிவந்து அவற்றை மாலையாகக் கோத்து என் கழுத்தில் சூட்டினீர்கள்! அதைத் தாங்கள் மறந்து விட்டாலும் நான் மறக்க முடியுமா? அரசே! உச்சி வேளைகளில், நீல நிற நீர் ததும்பிய ஏரிக்கரைகளில், பூங்கொத்துக்களின் பாரம் தாங்காமல் மரக்கிளைகள் வளைந்து வந்து அலங்காரப் பந்தல் போட்ட இடங்களில், பசும்புல் பாய்களில், நாம் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தவண்ணம் எத்தனை எத்தனை எத்தனையோ நாட்கள் கழித்தோமே, அதையெல்லாம் மறந்துவிட முடியுமா? அந்த நேரங்களில் மரக்கிளைகளில் நூறு ஜோடிக் குயில்கள் உட்கார்ந்து கீதமிசைத்ததையும், ஆயிரம் பதினாயிரம் வண்டுகள் சுற்றிச் சுற்றி வந்து ரீங்காரம் செய்ததையும், கோடி கோடி பட்டுப்பூச்சிகள் பல வர்ணச் சிறகுகளை அடித்

துக்கொண்டு ஆனந்த நடனம் ஆடியதை யும் நான் என்றேனும் மறக்க முடியுமா? எத்தனை ஜன்மங்களிலும் மறக்க முடி யுமா? என்னைப் பார்த்து 'நினைவிருக் கிறதா?' என்று கேட்கிறீர்களே, அப் படிக் கேட்கலாமா? நினைவிருக்கிறது, ஐயா, நன்றாக நினைவிருக்கிறது!......

இவ்வாறெல்லாம் சொல்ல வேண்டும் என்று அந்தப் பேதைப் பெண்ணின் உள்ளம் துள்ளித் துடித்தது.

ஆனால் அவளுடைய பவள இதழ் களோ "நினைவிருக்கிறது!" என்ற இரு சொற்களை மட்டுமே முணுமுணுத்தன.

"ஆகா! சமுத்திர குமாரி! நீ வாய் திறந்து பேசுகிறாயே! இந்த அதிசய மான இலங்கைத் தீவிலே உள்ள எத்த னையோ மணிமாட மண்டபங்களின் தூண்களில் அழகிய தேவ கன்னிகை களின் சிலைகளை அமைத்திருக்கிறார்கள்! ஒரு வேளை அத்தகைய சிலை வடிவமோ நீ என்று நினைத்தேன். நல்ல வேளை யாக நீ வாய் திறந்து பேசுகிறாய். இன்னும் சில வார்த்தைகள் சொல்! உன் இனிய குரலைக் கேட்க எனக்கு எவ்வளவோ ஆசையா யிருக்கிறது. நம் சேநாதிபதியிடம் நீ சில விஷயங் களைச் சொன்னாயாம். தொண்டைமான் நதியில் இரண்டு பெரிய மரக்கலங்கள் வந்து மறைவான இடத்தில் ஒதுங்கி யிருப்பதாயும் அவை நிறையப் போர் வீரர்கள் வந்திருப்பதாயும் சொன்னா யாம். அது உண்மைதானே, சமுத்திர குமாரி? அந்தக் கப்பல்களை உன் கண் களினால் நீயே பார்த்தாயா?" என்று இளவரசர் கேட்டார்.

"ஆம், ஐயா, என் கண்களினால் பார்த் தேன்!" என்றாள் பூங்குழலி.

"ஆகா! இப்போது கொஞ்சம் உன் குரலைக் கேட்க முடிகிறது. என் செவி கள் இன்பமடைகின்றன. நல்லது; மரக்கலங்களைப் பார்த்ததும் நீ உன் படகை ஒரு குறுகிய கால்வாயில் விட்டுக் கொண்டு போனாய். கப்பல்கள் போகும் வரையில் காத்திருப்பதற்காக அடர்ந்த காட்டினுள் புகுந்து மறைவான இடத் தில் படுத்துக்கொண் டிருந்தாய். அச் சமயம் கப்பல்களி லிருந்து இறங்கிய வீரர்கள் சிலர் அங்கே வந்தார்கள். நீ படுத்திருந்த இடத்துக்குப் பக்கத்தில் அவர்கள் நின்று பேசிக் கொண்டார்கள். அவர்கள் பேச்சை ஒட்டுக் கேட்க வேண் டும் என்று நீ விரும்பவில்லை. உன் விருப்ப மில்லாமலே அவர்கள் பேச்சு உன் காதில் விழுந்தது. நீ கேட்கும்படி நேர்ந்தது. இவை யெல்லாம் நம் சேநாதிபதியிடம் நீ கூறியவைதானே?"

"நடந்ததை நடந்தபடியே கூறினேன்."

"அவர்களுடைய பேச்சைக் கேட்ட தும் அதைப்பற்றி உடனே சேநாதிபதி யிடம் எச்சரிக்கை செய்ய வேண்டும் என்று உனக்குத் தோன்றியது. வீரர்கள் அப்பால் போன உடனே நீ புறப்பட் டாய்; சேநாதிபதி இருக்குமிடத்தைத் தேடிக் கொண்டு விரைந்து வந்தாய்! எப்படி வந்தாய், சமுத்திர குமாரி?"

"பாதி வழி படகில் வந்தேன்; பிறகு காட்டு வழியில் நடந்து வந்தேன்."

"எங்கே போகும் உத்தேசத்துடன் கிளம்பினாய், அம்மா?"

"சேநாதிபதி மாதோட்ட நகரில் இருப்பார் என்று எண்ணி அங்கே போகும் உத்தேசத்துடன் வந்தேன். வழி யில் மகிந்தலையில் இருப்பதாக அறிந் தேன். சேநாதிபதியைப் பார்த்துச் சொல் வதற்குள் போதும் போதும் என்று ஆகி விட்டது. எத்தனை பேர் குறுக்கே நின்று தடுப்பது?" என்று சொல்லிப் பூங்குழலி சேநாதிபதி நின்ற பக்கம் நோக்கினாள். அவளுடைய பார்வையில் கோடை காலத்து இடி முழக்கத்துக்கு முன்னால் தோன்றும் மின்வெட்டு ஜொலித்தது.

"சேநாதிபதியைப் பார்ப்பது என்றால் இலேசான காரியமா? இதோ நிற்கும் என் சிநேகிதர் உன்னைப் போலவே சேநாதிபதியைப் பார்க்க முயன்று அடைந்த கஷ்டத்தைக் கேட்டால் நீ ஆச்சரியப்பட்டுப் போவாய். தடைகளைப் பொருட்படுத்தாமல் நீ பிடிவாதம் பிடித் துச் சேநாதிபதியைப் பார்த்துச் சொன் னதே நல்லதாய்ப் போயிற்று. பூங்குழலி! சேநாதிபதியிடம் கூறியதை என்னிடமும் ஒரு தடவை கூறுவாயா? மரத்தின் மறைவிலிருந்து நீ கேட்டாயே, அப் போது அந்த வீரர்கள் எந்த விஷயத் தைப் பற்றிப் பேசினார்கள்?"

"அரசே! அதைச் சொல்வதற்கு என் நா கூசுகிறது."

"பெரிய மனது பண்ணி எனக்காக இன்னொரு தடவை சொல்!"

"தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு போவதற்காக அவர்கள் வந்திருப்பதாகப் பேசிக் கொண்டார்கள்."

"யாருடைய கட்டளையின் பேரில் அவ்விதம் வந்தார்கள் என்பது பற்றி ஏதாவது பேசிக் கொண்டார்களா?"

"அதை நான் நம்பவில்லை, ஐயா! பழுவேட்டரையர்களின் சூழ்ச்சியாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தேன்."

"உன்னுடைய கருத்தைப் பிறகு தெரிவிக்கலாம். அவர்கள் பேசிக்கொண்டதை மட்டும் சொல், சமுத்திரகுமாரி!"

"சக்கரவர்த்தியின் கட்டளை என்று பேசிக் கொண்டார்கள்."

"ரொம்ப நல்லது; அதற்குக் காரணம் ஏதாவது சொல்லிக் கொண்டார்களா?"

"சொல்லிக் கொண்டார்கள். தாங்கள் இந்த நாட்டிலுள்ள புத்த குருக்களுடன் சேர்ந்து கொண்டு இலங்கை ராஜ்யத்துக்கு மன்னராக முடி சூட்டிக் கொள்ளச் சூழ்ச்சி செய்தீர்களாம்...... இவ்விதம் சொன்ன அந்தப் பாவிகளை அங்கேயே கொன்று விட வேண்டும் என்று எனக்குக் கோபமாக வந்தது..."

"நல்ல காரியம் செய்ய எத்தனித்தாய்! சக்கரவர்த்தியின் தூதர்களை எந்தவிதத்திலும் தடை செய்யக் கூடாது என்று உனக்குத் தெரியாதா...? நல்லது; இன்னும் அவர்கள் முக்கியமான விஷயம் ஏதேனும் சொன்னதாக உனக்கு ஞாபகம் இருக்கிறதா?"

"சேனாதிபதிக்கு அவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள் என்கிற விஷயம் தெரியக்கூடாது என்றும், தெரிந்தால் தங்களைத் தப்புவிக்க அவர் பிரயத்தனம் செய்யலாம் என்றும் சொன்னார்கள். ஆகையால் தாங்கள் இருக்குமிடம் தெரிந்து கொண்டு நேரில் தங்களிடம் கட்டளையைக் கொடுத்துக் கையோடு அழைத்துப் போக வேண்டும் என்றும் சொன்னார்கள் ......"

"ஆகையால் நீ உடனே சேனாதிபதியைத் தேடிக் கொண்டு புறப்பட்டாயாக்கும். எனக்குப் பெரிய உதவி செய்தாய், சமுத்திர குமாரி! சற்று அப்பால் இரு. இவர்களிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி நான் கலந்து ஆலோசிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் முன்மாதிரி ரொம்ப தூரம் ஓடிப் போய் விடாதே. மறுபடியும் உன்னைப் பிடித்துக்கொண்டு வருவதற்கு வந்தியத்தேவரை அனுப்பும்படி செய்து விடாதே!"

சமுத்திர குமாரி சற்று நகர்ந்து ஒரு தூணின் அருகில் நின்று கொண்டாள். இளவரசரின் முகத்தைப் பார்க்கக்கூடிய இடத்திலேதான் நின்றாள்.

தேன் குடத்தில் மூழ்கிய இரு வண்டுகள் மூச்சுத் திணறிக் கொண்டிருந்தன. மெதுவாகச் சமாளித்துக் கரைக்கு வந்த பிறகு தேனைச் சுவை பார்த்துக் களிக்கத் தொடங்கின. பூங்குழலியின் கண்களும் இப்போது அத்தகைய சௌகரியமான நிலையில் இருந்தன. இளவரசரின் முக சௌந்தரியமாகிய தேனை அவை பருகித் திளைத்தன. அவளுடைய உள்ளமோ நெஞ்சுக்குள் கட்டுப்பட்டு நிற்கமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்துக் கொண்டிருந்தது. நெஞ்சை வெடித்துக் கொண்டு வெளியேறி வான வெளியெங்கும் பொங்கி நிறைந்துவிட வேண்டும் என்று தவித்துக் கொண்டிருந்தது.

* * *

இளவரசர் சேனாதிபதி பூதி விக்கிரம கேசரியைப் பார்த்து, "ஐயா! பரம்பரையாக எங்கள் குடும்பத்துக்குச் சிநேகிதமான குலத்தின் தலைவர் தாங்கள்; என் தந்தையின் உற்ற நண்பர்: தங்களை நான் என் தந்தைக்கு இணையாகவே மதித்து வந்திருக்கிறேன். தாங்களும் என்னைத் தங்கள் சொந்தப் புதல்வனாகவே கருதிப் பாராட்டி வந்திருக்கிறீர்கள். ஆகையால் இச்சமயம் என்னுடைய கடமையைச் செய்வதற்குத் தாங்கள் உதவி செய்ய வேண்டும். அதற்குக் குறுக்கே நிற்கக் கூடாது!" என்றார்.

சேனாதிபதி மறுமொழி சொல்வதற்குள் பார்த்திபேந்திரனைத் திரும்பிப் பார்த்து "ஐயா! தங்களையும் கேட்டுக் கொள்கிறேன். தாங்கள் என் அருமைத் தமையனாரின் உற்ற நண்பர். என் தமையனாரின் வாக்கைத் தெய்வத்தின் வாக்காக மதித்து நான் போற்றுகிறவன். ஆகையால் தங்களுடைய வார்த்தையையும் மதித்துப் போற்றக் கடமைப்பட்டவன். தங்களைப் பெரிதும் வேண்டிக் கொள்கிறேன். என் கடமையை நான் நிறைவேற்றுவதற்குத் தடை எதுவும் சொல்லக் கூடாது!" என்றார்.

சேனாதிபதியும் பார்த்திபேந்திரனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். அந்தப் பார்வையின் மூலம் ஒருவருடைய பயத்தை இன்னொருவருக்குத் தெரிவித்துக் கொண்டார்கள்.

சேனாதிபதி இளவரசரைப் பார்த்து, "இளவரசே! தாங்கள் கூறுவது ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. வாழ்நாளெல்லாம் நான் போர்க்களத்திலே கழித்தவன். மூடுமந்திரமாகப் பேசினால் தெரிந்து கொள்ள இயலாதவன். தங்களுடைய கடமையைச் செய்யப் போவதாகச் சொல்லுகிறீர்கள். அப்படியென்றால்

என்ன? எந்தக் கடமையை என்னமாதிரி செய்யப் போவதாக உத்தேசித்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''இச்சமயம் என்னுடைய கடமை ஒன்றே ஒன்றுதான். என் தந்தையின் கட்டளையை நிறைவேற்றி வைக்க வேண்டியதுதான். என்னைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படியான கட்டளையுடன் என் தந்தை ஆட்களை அனுப்பி வைத்திருக்கிறார். என்னை அவர்கள் தேடி அலையும்படியாக ஏன் வைத்துக் கொள்ள வேண்டும்? நானே அவர்கள் இருக்குமிடம் சென்று என்னை ஒப்புக் கொடுத்து விடுவேன். அதுவே இப்போது நான் செய்ய வேண்டிய கடமை......''

''முடியவே முடியாத காரியம். என் உடம்பில் உயிருள்ள வரையில் அதை நான் அநுமதிக்க மாட்டேன். தடுத்தே தீருவேன்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

சேனாதிபதி அவனைப் பார்த்து, ''பதற வேண்டாம்; பொறுங்கள்!'' என்றார். பின்னர் இளவரசரை நோக்கிக் கூறினார்:-

''ஐயா! தங்களுடைய கடமையைப் பற்றிச் சொன்னீர்கள். எனக்கும் ஒரு கடமை இருக்கிறது. அருள் புரிந்து அதைக் கேட்கவேண்டும். கொடும்பாளூர் வேளிர் பெருங்குடியில் இன்று உயிரோடிருக்கும் ஆண்மகன் நான் ஒருவன்தான். மற்றவர்கள் அனைவரும் சோழ சாம்ராஜ்யத்தின் சேவையில் இறந்து போனார்கள். அநேகமாக எல்லாரும் போர்க்களத்தில் மடிந்தார்கள். நானும் ஒருநாள் அவ்விதம் இறந்து போவேன். யார் கண்டது? ஆகையால் என் வார்த்தையைக் கொஞ்சம் பொறுமையுடன் கேட்க வேண்டும். அரண்மனை மாடங்களில் அருமையாக வளர்க்கப்பட்டு வந்த தங்களைச் சென்ற ஆண்டில் தென் திசைப் படைகளின் மா தண்ட நாயகராகச் சக்கரவர்த்தி நியமித்தார். அப்போது என்னைத் தனியாக அழைத்துச் சொன்னார்: 'இளவரசன் என்னை விட்டுப் பிரிவது என் உயிரே உடலிலிருந்து பிரிவது போலிருக்கிறது. ஆயினும் என்னுடைய ஆசைக்காக அவனை நான் அரண்மனைக்குள்ளேயே வைத்து வளர்க்கக் கூடாது. அவன் வெளியேறிப் போக வேண்டியதுதான்; அண்ணனைப்போல் வீரன் என்று பெயர் எடுக்க வேண்டியதுதான். ஆனால் அவன் உயிருக்கு ஏதாவது ஆபத்து வந்தால் அதே கணத்தில் என் உயிரும் போய் விடும். அவனுக்கு எவ்வித அபாயமும் நேராமல் பாதுகாக்க வேண்டியது உன் பொறுப்பு!'...இவ்வாறு சக்கரவர்த்தி எனக்குக் கட்டளையிட்டார். சென்ற ஆண்டில் அவ்வாறு கூறிய சக்கரவர்த்தி இப்போது தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி கட்டளையிடுவாரா? அவ்வாறு கட்டளையிடும்படியாகத் தாங்கள் என்ன செய்து விட்டீர்கள்? இலங்கைச் சிம்மாதனத்தைக் கைப் பற்றுவதற்குத் தாங்கள் சூழ்ச்சி செய்ததாகச் சொல்வது எவ்வளவு அபத்தம்? இந்த அபவாதத்தை யாராவது நம்ப முடியுமா?......''

கொடும்பாளூர்ப் பெரிய வேளார் கூறி வந்ததை இது வரை பொறுமையுடன் கேட்டு வந்த இளவரசர் இப்போது குறுக்கிட்டார்.

''வேறு யாராவது நம்ப முடியாதோ, என்னமோ? ஆனால் என்னால் நம்ப முடியும்!'' என்றார்.

''என்ன சொல்கிறீர்கள், இளவரசே!''

''இலங்கைச் சிம்மாசனத்தைக் கைப்பற்ற நான் சூழ்ச்சி செய்தது உண்மைதான் என்று சொல்கிறேன்.''

வந்தியத்தேவன் இப்போது முன்னால் வந்து ''இது என்ன ஐயா! சற்று முன்பு வரையில் சத்தியம்—தர்மம் என்று சொல்லி வந்தீர்கள். இப்போது இப்படிப் பெரும் பொய் சொல்கிறீர்களே!... சேனாதிபதி! இவர் வார்த்தையை நீங்கள் நம்ப வேண்டாம். நேற்றிரவு புத்த குருக்களின் மகாசபையார் இவருக்கு இலங்கைச் சிம்மாதனத்தையும் கிரீடத்தையும் அளித்தார்கள். இவர் வேண்டாம் என்று மறுதளித்தார். இதற்கு நானும் இதோ நிற்கும் இந்த வைஷ்ணவனும் சாட்சி!'' என்றான்.

பொன்னியின் செல்வர் புன்னகை புரிந்து, ''வந்தியத்தேவரே! ஒரு கேள்வி! சூழ்ச்சி செய்கிறவர்கள் சாட்சி வைத்துக் கொண்டு சூழ்ச்சி செய்வார்களா? நீங்கள் இருவரும் பக்கத்தில் இருந்ததினாலேயே நான் இலங்கைச் சிம்மாசனத்தையும் கிரீடத்தையும் மறுதளித்திருக்கலாம் அல்லவா!'' என்றார்.

வந்தியத்தேவன் அசந்து போனான்! இதற்கு எதிராக அவனால் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

இளவரசர் மேலும் கூறினார்: ''வாணர் குல வீரரே! உமக்குச் சந்தேகம் இருந்தால் அதோ நிற்கும் வைஷ்ணவரைக் கேட்கலாம். முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் அவரிடம் என்ன சொல்லி அனுப்பினார் என்று கேட்டு அறிந்து கொள்ளலாம். புத்த குருமார்கள் தங்க



னுக்கு இலங்கைச் சிம்மாதனம் அளிக்க முன் வருவார்கள். சாட்சியம் வைத்துக் கொண்டு அதை மறுதளிக்கவும்' என்று சொல்லி அனுப்பினாரா, இல்லையா என்று விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம்!''

இதைக் கேட்டு அங்கிருந்த எல்லாருமே திகைத்துப் போய் நின்றார்கள்.

இளவரசர் சேநாதிபதியைப் பார்த்துச் சொன்னார்:—''ஐயா! இதைக் கேளுங்கள். இந்த இலங்கையைக் கவர்ந்து ஆள வேண்டும் என்ற பேராசை என் மனதில் இருந்தது உண்மை. இந்தப் பேராசையை எனக்கு உண்டுபண்ணியவர் என் தமக்கையார். 'தம்பி! நீ நாடு ஆளப் பிறந்தவன். உன் கையில் சங்கு சக்கர ரேகை இருக்கிறது. இங்கே உனக்கு இடம் இல்லை. ஆகையால் இலங்கைக்குப் போ! இலங்கைச் சிம்மாதனத்தைக் கைப்பற்றிக் கொள்!' என்று இப்படியெல்லாம் இளைய பிராட்டி அடிக்கடி சொல்லி என் மனதில் ஆசையை வளர்த்து விட்டார். ஆகையால் நான் குற்றவாளிதான். சக்கரவர்த்தி என்னைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி கட்டளையிட்டதற்குக் காரணம் இருக்கிறது......''

''கொஞ்சம் பொறுங்கள், இளவரசே! அப்படித் தங்கள் மனதில் எண்ணம் உதித்திருந்தால் அது இந்த இலங்கைத் தீவின் பாக்கியம். அதற்குப் பொறுப்பாளியும் தாங்கள் அல்ல; தங்கள் தமக்கையார் இளைய பிராட்டியும் அல்ல. சுந்தர சோழ சக்கரவர்த்திதான் அதற்குப் பொறுப்பாளி. அவரே என்னிடம் பல முறை சொல்லியிருக்கிறார். தங்களை இலங்கைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைத்துப் பார்க்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். குந்தவை தேவியிடம் இதைப்

பற்றி முதன் முதலில் கூறியவரும் சக்கரவர்த்திதான். தங்கள் தந்தையின் விருப்பத்தையே தமக்கையார் தங்களிடம் தெரியப்படுத்தியிருக்கிறார். ஆகையால் தாங்கள் குற்றவாளி அல்ல......''

''சேநாதிபதி! அப்படியானால் என் தந்தையிடம் போவதற்கு நான் ஏன் தயங்கவேண்டும்? அவரிடம் நடந்தது நடந்தபடி சொல்கிறேன். இதோ இருக்கும் இந்த இரண்டு பேரும் எனக்காகச் சாட்சி சொல்லட்டும். பிறகு சக்கரவர்த்தி என்ன கட்டளை இடுகிறாரோ, அதன்படி நடந்து கொள்வது என் கடமை......''




பார்த்திபேந்திரன் இப்போது அனல் கக்கும் குரலில் கூறினான் :—''சேநாதிபதி! ஏதேதோ வெறும் பேச்சுப் பேசிக்கொண்டிருக்கிறோம். இனியும் மூடி மறைப்பதில் பயன் ஒன்றுமில்லை. இளவரசரிடம் உண்மையைச் சொல்லியே தீரவேண்டும். தாங்கள் சொல்கிறீர்களா அல்லது நான் சொல்லட்டுமா!''

''நானே சொல்கிறேன்; பொறுங்கள்!'' என்றார் சேநாதிபதி. அக்கம் பக்கம் பார்த்துவிட்டுக் கூறினார்:—''இளவரசே! தங்களுடைய களங்கமற்ற உள்ளத்தை மாசுபடுத்த வேண்டாம் என்று நான் எண்ணியது பயன்படவில்லை. ஒரு விரஸமான விஷயத்தைப் பற்றித் தங்களுக்குச் சொல்ல வேண்டியிருக்கிறது. பெரிய பழுவேட்டரையர் இந்த முதிய பிராயத்தில் நந்தினி என்னும் பெண்ணை மணம் புரிந்து கொண்டிருப்பது தங்களுக்குத் தெரிந்த விஷயமே. அவள் ஒரு சூனியக்காரி. பயங்கரமான மாய மந்திர வித்தைகள் அவளுக்குத் தெரிந்திருக்கின்றன. அவற்றின் உதவியால் பெரிய பழுவேட்டரையரை அவள் தன் காலடியில் போட்டு வைத்துக் கொண்டிருக்கிறாள். அவள் காலால் இட்ட பணியை இவர் தலையில் ஏந்தி நிறைவேற்றி வைக்கிறார். பழங்குடியில் பிறந்து பல வீரச் செயல்கள் புரிந்த அந்தப் பெரியவருக்கு விதிவசத்தால் இந்தமாதிரி துர்க்கதி சம்பவித்து விட்டது......''

''சேநாதிபதி! இது நான் கேள்விப்படாதது அல்லவே? சோழ தேசத்தில் நாடு நகரமெல்லாம் பேசிக் கொள்ளும் விஷயந்தானே?'' என்றார் இளவரசர்.

''அந்த மந்திரக்காரி நந்தினியின் சக்தி இது வரையில் பழுவேட்டரையர்களை மட்டும் ஆட்டிவைத்துக் கொண்டிருந்தது. இளவரசே! மன்னிக்க வேண்டும்! இப்போது அவள் சக்கரவர்த்தியின் பேரிலும் தன்னுடைய மந்திரத்தைப் போட ஆரம்பித்து விட்டாள். அதனால்தான் இத்தகைய கட்டளையை,—தங்களைச் சிறைப்

படுத்தி வரும்படியான கட்டளையை,— சக்கரவர்த்தி பிறப்பித்திருக்கிறார்!......"

"சேனாதிபதி! எச்சரிக்கை! சக்கரவர்த்தியைப் பற்றிக் கௌரவக் குறைவாக எதுவும் சொல்ல வேண்டாம். என் தந்தையின் உடம்பில் உயிர் உள்ள வரையில் அவர் இடும் கட்டளை எதுவானாலும், எந்த சந்தர்ப்பத்தில் இடப்பட்டாலும், அதுவே தெய்வத்தின் கட்டளையாகும்..."

"அதை நாங்கள் மறுக்கவில்லை, இளவரசே! சக்கரவர்த்தியின் சுதந்திரத்துக்கு மட்டுமன்றி அவருடைய உயிருக்கே அபாயம் வந்து விடுமோ என்றுதான் அஞ்சுகிறோம். நந்தினியைப் பற்றிய முழு உண்மையை நேற்று வரை நானே அறிந்து கொள்ளவில்லை. நேற்றிரவு தான் பார்த்திபேந்திரன் மூலமாகத் தெரிந்து கொண்டேன். அந்தப் பயங்கரமான விஷயத்தைத் தாங்களும் தெரிந்து கொள்வது அவசியம்.

"மூன்று வருஷத்துக்கு முன்னால் மதுரைக்கு அருகில் வீரபாண்டியனோடு இறுதி யுத்தம் நடந்தது அல்லவா? அப்போது தங்கள் தமையனார் கரிகாலரும் இதோ உள்ள பார்த்திபேந்திரரும் நானும் கலந்தாலோசித்து ஒவ்வொரு காரியத்தையும் செய்து வந்தோம். பாண்டியனுடைய சைனியங்கள் அடியோடு நிர்மூலமாயின. வீரபாண்டியன் முன்னொரு தடவை பாலைவனத்தில் ஓடி ஒளிந்ததுபோல் இப்போதும் ஓடித் தப்பிக்க முயன்றான். அதற்கு இடம் கொடுக்கக் கூடாதென்று நாங்கள் மூவரும் அவனை எப்படியாவது கைப்பற்றத் தீர்மானித்துப் பெரு முயற்சி செய்தோம். இந்தத் தடவை வீரபாண்டியனுடைய தலையைக் கொண்டு போகாமல் தஞ்சாவூருக்குத் திரும்புவதில்லை என்று நாங்கள் மூவரும் சபதம் செய்திருந்தோம். ஆகையால் வேறு யாரையும் நம்புவதில்லையென்று நாங்களே அவனைத் தொடர்ந்து சென்றோம். கடைசியாக ஒரு கோயிலுக்குப் பக்கத்தில் இருந்த குடிசையில் அவன் ஒளிந்திருப்பதைக் கண்டு பிடித்தோம். குடிசைக்கு வெளியில் எங்களைக் காவலுக்கு நிறுத்தி வைத்துவிட்டுத் தங்கள் அண்ணன் கரிகாலர்தான் உள்ளே நுழைந்தார். வீரபாண்டியனைக் கொன்று அவன் தலையை எடுத்து வந்தார். நாங்களும் எங்கள் காரியம் முடிந்துவிட்டதென்று குதூகலமாகத் திரும்பிச் சென்றோம். ஆனால் அந்தக் குடிசைக்குள்ளே ஒரு சிறிய நாடகம் நடந்ததென்பது எங்களுக்குத் தெரியாது. வீரபாண்டியனுக்கு அடைக்கலம் கொடுத்திருந்த பெண் ஒருத்தி குறுக்கே நின்று தடுத்துத் தன் காதலனுக்கு உயிர்ப்பிச்சை கேட்டாள். கரிகாலர் அவளை உதைத்துத் தள்ளி விட்டு வீரபாண்டியனுடைய தலையைக் கொய்து வெளியே எடுத்து வந்தார். இளவரசே! அவ்விதம் சோழ குலத்தின் ஜன்ம சத்துருவான வீர பாண்டியனைக் காப்பாற்ற முயன்றவள் தான் நந்தினி! அவள்தான் பிற்பாடு எழுபது பிராயத்துக் கிழவரை மணந்து தஞ்சாவூருக்கு வந்து 'பழுவூர் இளைய ராணி'யாக விளங்குகிறாள்! அவள் எதற்காக,—என்ன நோக்கத்துடன்,— வந்திருப்பாள் என்பதை நாம் ஊகிக்கலாம் அல்லவா? வீரபாண்டியனுக்காகப் பழிக்குப் பழி வாங்கத்தான் வந்திருக்கிறாள். சோழ குலத்தை அடியோடு நிர்மூலமாக்கி விடுவதற்காக வந்திருக்கிறாள். அவள் அருகில் சென்றவர் யாரும் அவளுடைய மோகவலையில் தப்பாமல் இரும்புவது கடினம். அதோ நிற்கும் வந்தியத்தேவன் அதற்குச் சாட்சி சொல்லுவான். சோழகுலத்தைப் பூண்டோடு அழித்து விடப் பயங்கர சபதம் எடுத்திருக்கும் கூட்டத்தைப்பற்றி அதோ நிற்கும் வைஷ்ணவன் சாட்சி சொல்வான். அவர்களுக்கு அவசியமான பணத்தையெல்லாம் நந்தினிதான் கொடுக்கிறாள். இளவரசே! துரதிர்ஷ்டவசமாக நம் சக்கரவர்த்திப் பெருமானும் அந்தப் பாதகியின் வலையில் விழுந்து விட்டதாகக் காண்கிறது. மதுராந்தகத் தேவனுக்குப் பட்டம் கட்டுவது பற்றிச் சக்கரவர்த்தியை யோசித்து வருவதாகத் தெரிகிறது. ஆகையால், சக்கரவர்த்தியின் கட்டளையென்று கருதித் தாங்கள் தஞ்சைக்குப் போவதற்கு இது தருணமல்ல......"

"சேனாதிபதி! தாங்கள் கூறிய செய்திகள் எனக்கு மிக்க வியப்பை உண்டு பண்ணியிருக்கின்றன. ஆயினும் அச்செய்திகளில் நான் செய்த முடிவுதான் உறுதிப்படுகிறது. என் தந்தையை அவ்வளவு பயங்கரமான அபாயங்கள் சூழ்ந்திருக்கும்போது நான் இருக்கவேண்டிய இடம் அவர் அருகிலேதான். இலங்கை அரசு எனக்கு என்னத்திற்கு? அல்லது இந்த உயிர்தான் என்னத்திற்கு? இனி யோசனை ஒன்றுமே தேவையில்லை. என்னைத் தடை செய்வதற்கு யாரும் முயல வேண்டாம்!" என்று இளவரசர் கம்பீரமாகக் கூறினார். பிறகு, சற்றுத் தூரத்தில் தூணில் சாய்ந்து கொண்டு தம்மைக்

கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த பூங்குழலியின் மீது அவர் கண்கள் சென்றன.

"சமுத்திர குமாரி! சற்று இப்படி அருகில் வா!" என்றார்.

பூங்குழலி நெருங்கி வந்தாள்.

"பெண்ணே! நீ கொண்டு வந்த செய்தியின் மூலம் எனக்குப் பெரிய உதவி செய்தாய். இன்னும் ஓர் உபகாரம் எனக்கு நீ செய்ய வேண்டும். செய்வாயா?" என்று கேட்டார்.

அடடா! இது என்ன? இந்த ஏழைப் படகுக்காரியிடமா இவர் உதவி கோருகிறார்? இவருக்குக் குற்றேவல் செய்யும் பாக்கியத்தை நாடி வந்தேன்; இவர் என்னிடம் உதவி வேண்டும் என்று யாசிக்கிறாரே! கடவுளிடம் வரம் கேட்க வந்தேன்; கடவுள் தம் திருக் கரங்களை நீட்டி என்னிடம் 'பிச்சை போடு' என்று கேட்கிறாரே?—இவ்வாறு மனதில் எண்ணி, "இளவரசே! தாங்கள் இட்ட கட்டளையை நிறைவேற்றக் காத்திருக்கிறேன்!" என்றாள் பூங்குழலி.

"சமுத்திர குமாரி! என்னைத் தேடிக் கொண்டு இரண்டு மரக்கலங்கள் தொண்டைமான் ஆற்று முகத்துவாரத்தின் அருகில் காத்திருக்கின்றன என்று சொன்னாய் அல்லவா? அந்த இடத்துக்கு நான் அதி சீக்கிரமாகப் போய்ச் சேர வேண்டும். எனக்கு வழிகாட்டி அழைத்துக்கொண்டு போவாயா?"

"பெண்ணே! 'முடியாது' என்று சொல்!" என்பதாக ஒரு குரல் கர்ஜித்தது. அது சேனாதிபதியின் குரல்தான் என்பதைப் பூங்குழலி உணர்ந்தாள்.

இத்தனை நேரமும் ஏதோ ஒரு சொப்பன லோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தவளுக்கு இப்போதுதான் தன் நெருக்கடியான நிலைமை தெரிந்தது. எந்த அபாயத்திலிருந்து இளவரசரைத் தப்புவிக்கலாம் என்ற ஆசையுடன் இவள் அவசர அவசரமாக ஓடி வந்தாளோ, அந்த அபாயத்தின் வாயிலேயே கொண்டு சேர்க்கும்படி இளவரசர் இப்போது தன்னைக் கேட்டுக் கொள்கிறார்!

"பெண்ணே! 'முடியாது' என்று சொல்!" — சேனாதிபதியின் இந்தக் கட்டளையின் பொருள் அவளுக்கு இப்போது புலனாயிற்று. நாலாபுறத்திலிருந்தும் ஆயிரம் குரல்கள் அதே கட்டளையை அவளுக்கு இட்டன. மரங்கள் அவ்வாறு முழங்கின; மண்டபத்தின் தூண்கள் அவ்விதம் அலறின; மரக் கிளைகளின் மேலிருந்து பறவைகள் கதறின.

ஆனால் அந்தப் பேதைப் பெண்ணின் இதயத்தின் உள்ளே ஒரு மெல்லிய குரல் கேட்டது. 'பூங்குழலி! இதோ உன் அதிர்ஷ்டம்! இளவரசருக்கு வழிகாட்டி அழைத்துப் போவாயானால் அவருடன் இரண்டு தினங்கள் கழிக்கலாம். அவர் அருகில் நீ இருக்கலாம். அவர் உன்னைப் பாராதபோது அவரை நீ பார்க்கலாம், அவர்மீது பட்டு வரும் காற்று உன் மீதும் படும். அவருடைய குரல் உன் காதில் அடிக்கடி கேட்கும். அடி பெண்ணே! நீ கண்டு வந்த எட்டாத கனவில் ஒரு சிறிது நிறைவேறும். பிறகு எது எப்படியானால் என்ன? பூங்குழலி! ஒத்துக் கொள்!' என்று அந்த மெல்லிய குரல் அவள் மனக் காதில் கூறியது.

"சமுத்திர குமாரி! ஏன் தயங்குகிறாய்! எனக்கு இந்த உதவி நீ செய்ய மாட்டாயா? நானே வழி கண்டு பிடித்துக்கொண்டு போக வேண்டியதுதானா?" என்று இளவரசர் கூறியது அவளுடைய மனம் திடமடையக் காரணமாயிற்று.

"இளவரசே! வழி காட்ட நான் வருகிறேன்!" என்றாள்.

சேனாதிபதி பூதி விக்கிரம கேசரி அப்போது தம் தொண்டையைக் கனைத்துக்கொண்ட சத்தம் பூகம்பம் ஏற்படு

வதற்கு முன்னால் பூமியின் கர்ப்பத்திலிருந்து எழுகின்ற பயங்கரத் தொனியை நிகர்த்திருந்தது.

அவர் ஓர் அடி முன்னால் வந்து கூறினார்:— "இளவரசே! தங்கள் விருப்பத்துக்குக் குறுக்கே நான் நிற்கமாட்டேன். ஆனாலும் என் வேண்டுகோள் ஒன்றுக்குச் செவி சாய்க்க வேணும். தங்களைச் சிறைப்படுத்த வந்திருப்பவர்களிடம் தங்களை ஒப்படைக்கும் வரையில் தங்களைப் பாதுகாப்பது என் பொறுப்பு. நேற்றிரவு தங்களைக் கொல்ல நடந்த முயற்சிகளைப் பற்றிச் சற்று முன்னால் தங்கள் தோழர்கள் சொன்னார்கள். அந்தக் கொலைகாரர்கள் இன்னும் பிடிபடவில்லை. அவர்கள் யார் என்று தெரியவும் இல்லை. என் மனதில் உள்ளதைச் சொல்வதற்காக மன்னியுங்கள். இந்தப் பெண்ணின் பேரிலேயே எனக்குக் கொஞ்சம் சந்தேகம் உண்டு. அந்தக் கொலைகாரர்களுக்கு இவளும் ஒரு வேளை உடந்தையாயிருக்கலாம் அல்லவா? மரக்கலங்களில் தங்களைச் சிறைப்படுத்தி அழைத்துப் போக வந்திருக்கிறார்கள் என்பதே இவளுடைய கற்பனையாயிருக்கலாம் அல்லவா? ஏன் இருக்கக் கூடாது? சற்று முன்னால் இவளுடைய கத்தியைத் தங்கள் தோழர் வந்தியத்தேவர் பிடுங்கி எறிந்தபோது, அது யார்பேரிலோ விழுந்து ஓலக் குரல் ஒன்று கேட்டதே? அது யாருடைய குரல்? — இந்தப் பெண் தாராளமாக வழி காட்டிக் கொண்டு வரட்டும். நம்முடைய யானை மேல் ஏறிக் கொண்டு முன்னால் செல்லட்டும். ஆனால் தங்களுடன் நானும் தொண்டைமான் ஆற்றில் உள்ள கப்பல்களைக் காணும் வரையில் வந்தே தீருவேன்! அது என்னுடைய கடமை!"

சேநாதிபதியின் இந்தப் பேச்சைப் புன்னகை பூத்த முகத்துடன் கேட்டுக் கொண்டு நின்ற இளவரசர் "அப்படியேயாகட்டும்! தங்களுடைய கடமையை நிறைவேற்றுவதற்கு நானும் குறுக்கே நிற்கவில்லை!" என்றார். (தொடரும்)

அட்டைப்பட விளக்கம்

# ஸ்ரீநிவாச காந்தி நிலையம்

தமிழ்நாடு தந்த சிறந்த தேசபக்த சீலர்களில் ஒருவரான ஸ்ரீ எஸ். சீனிவாச ஐயங்கார் அவர்களுடைய பெயரையும், காந்தி மகாத்மாவின் திருநாமத்தையும் ஒருங்கே தாங்கி "சீனிவாச காந்தி நிலையம்" என்னும் பெயருடன் மயிலாப்பூரில் நடந்து வரும் ஸ்தாபனத்தைப் பற்றி நேயர்கள் கேள்விப் பட்டிருப்பார்கள்.

லேடி சதாசிவ ஐயர், ஸ்ரீமதி கஸின்ஸ், ஸ்ரீமதி முத்துலக்ஷ்மி ரெட்டி இவர்களுடைய பெரு முயற்சியால் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் சென்னையில் மாதர் சங்கம் தோன்றியது. பெண் குலத்தின் முன்னேற்றத்துக்காகவும் நாட்டின் சுதந்திரத்துக்காகவும் இச்சங்கம் அரும்பாடுபட்டு இடைவிடாத தொண்டாற்றி வந்திருக்கிறது. இச்சங்கத்தில் முக்கியமான திருப்பணிகளைச் சென்ற நாலு வருஷங்களாக ஸ்ரீநிவாச காந்தி நிலயம் ஏற்று நடத்தி வருகிறது.

ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்காரின் புதல்வியார் ஸ்ரீமதி அம்புஜம்மாள் தற்சமயம் நிலயத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்று நடத்தி வருகிறார். அவருக்கு உதவியாகக் கனம் பக்தவத்சலம் அவர்களின் குமாரி ஸ்ரீமதி சரோஜினி வரதப்பனும் ஸ்ரீமதி வஸுமதி ராமஸ்வாமியும் காரியதரிசிகளாக இருந்து தொண்டாற்றி வருகிறார்கள்.

ஸ்ரீமதி அம்புஜம்மாள் காந்தி மகாத்மாவிடம் அளவில்லாத பக்தியும் அவருடைய நிர்மாணத் திட்டங்களில் பூரண நம்பிக்கையும் உடையவர். உப்பு சத்தியாக்கிரகப் போரில் சிறை சென்றவர். காந்தி மகானின் ஆசிரமத்தில் வசித்து அவருடைய அருமைச் சீடர்களில் ஒருவராக வாழ்க்கை நடத்தியவர். அன்று முதல் இன்றுவரை மகாத்மாவின் நிர்மாணத் திட்டங்களில் நம்பிக்கை வைத்துத் தொண்டாற்றி வருகிறார்.

ஸ்ரீமதி அம்புஜம்மாள் தமது சொந்த நன்கொடையாக அளித்துள்ள அழகிய சிறு கட்டிடத்தில் நிலயத்தின் தொண்டுகள் நடந்து வருகின்றன.

தினந்தோறும் ஸ்ரீநிவாச காந்தி நிலயத்தில் சுமார் எண்பது ஏழைக் குழந்தைகளுக்குச் சாப்பாடும், நாற்பது சிறு குழந்தைகளுக்குப் பாலும் கொடுத்து வருகிறார்கள். இந்த ஏழைக் குழந்தைகளைப் பராமரிக்கவும் அவர்களுக்கு எழுத்தறிவு ஊட்டவும் ஸ்ரீநிவாச காந்தி நிலயம் பள்ளிக்கூடம் ஒன்றை நிறுவ முன்வந்திருக்கிறது.

ஸ்ரீநிவாச காந்தி நிலயம் ஆரம்பித்திருக்கும் பள்ளிக்கூட நிதிக்காக அன்பர்கள் நன்கொடை அளித்து உதவக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

ஸ்ரீமதி வஸுமதி ராமஸ்வாமி, 163-F, ராயப்பேட்டை ஹைரோடு, ராயப்பேட்டை, சென்னை; ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன், 'மோகனு', கிரீன்வேஸ் ரோடு, அடையாறு, சென்னை; ஸ்ரீமதி அம்புஜம்மாள், ஸ்ரீநிவாச காந்தி நிலயம், பீமசேன் ரோடு, மயிலாப்பூர், சென்னை என்ற விலாசங்களில் ஏதாவது ஒன்றுக்கு நன்கொடைகள் அனுப்பி வைக்கலாம்.

ஸ்ரீநிவாச காந்தி நிலயத்தின் வளர்ச்சிக்காகவும், பெண் குலத்தின் முன்னேற்றத்துக்காகவும், ஏழைக் குழந்தைகளின் பராமரிப்புக்காகவும் இடைவிடாமல் பாடுபட்டு வரும் ஸ்ரீமதி அம்புஜம்மாள், ஸ்ரீமதி வஸுமதி ராமஸ்வாமி, ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன் ஆகியவர்களையும் மேற்படி நிலயம் ஏழைக் குழந்தைகளுக்குக் காலைவேளைகளில் பால் கொடுக்கும் காட்சியையும் இந்த இதழ் அட்டைப் படத்தில் காணலாம்.



# பூக்காரி

சுவாமிநாத ஆத்ரேயன்

[அகில உலகச் சிறுகதைப் போட்டிக்காக "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை நடத்திய அகில இந்தியச் சிறுகதைப் போட்டிக்கு அனுப்பப்பட்ட தமிழ்க் கதை—4]

பூக்காரி குரல் கொடுத்தாள். "மல்லிகைப் பூ!...... சம்பகப்பூ!...... ரோசாப் பூ! ...சாமந்திப் பூ!" .

கோயில் மணி ஓசையைப் போல கணீர் கணீர் என்று தெருவில் ஒலி வீசிய அந்தக் குரலில் பெருமிதமும் அன்பும் தொனித்தன. அவளுக்கு அந்தத் தெருவில் உள்ளோர் வைத்த பெயர் 'குட்டி'—என்பது. அவள் பெரிய மனுஷியான பிறகு, "உன் பெயரென்ன? என்று சில பேர் கேட்டார்கள்.

"என் பெயர் உனக்கு எதற்கு?"

"கூப்பிடத்தான்."

"நேற்றுக் கூப்பிட்டாயே, அதே பெயர் தான்."

ஆம். அவள் அந்தப் பெயரை மாற்றிக் கொள்ள விரும்பவில்லை.

அவளுடைய பாட்டன்தான் தோட்டம் போட்டிருந்தான். அவனால் நடமாட முடியாது. உட்கார்ந்தபடியே வீட்டுக் கொல்லையைக் கொத்திப் பதியன்கள் போட்டிருந்தான். கிழவனின் வளம்பட்ட கைராசிக்குத் தோட்டம் பூத்துக் குலுங்கியது. முதலில் சில நாட்கள் வரை தன் அருமைப் பேத்தி- அப்பொழுது அவளுக்கு வயது ஏழு இருக்கும் — அவள் தலையில் எல்லாவற்றையும் வைத்துக் கட்டினான். சில நாட்களில் அவளுக்கு அலுத்துப் போய் விட்டது.

ஒரு நாள், "ஏ, குட்டி! உனக்கு வேண்டாமென்றால் தெருவெல்லாம் சுற்றி, பூவெல்லாம் விற்றுவிட்டுத் தான் வாயேன்" என்றான்.

"விற்கிறதுன்னா ........?" என்று புருவம் நெரித்து வினவினாள் அந்தச் சிறுமி.

"நீ வளர்ந்தால் ஊரையே விற்று முடிஞ்சுடுவே. இதுவா உனக்குத் தெரியாது? இடுப்பிலே கூடையைத் தூக்கி வைத்துக்கொண்டு, 'பூ வாங்கலியோ பூ' என்று தெருவோடு கூவிக் கொண்டே போகிறது. தெருவிலே உள்ளவங்க கூப்பிட்டுக் கேட்பாங்க. கேட்கிற பூவைக் கொடுத்திட்டு கொடுக்கிற காசை வாங்கிக் கொண்டு வருகிறது"— என்று விளக்கினான் கிழவன்.

பின் வேறு என்னதான் சொல்லுவான்?

ஆனால் வியாபாரத்தின் நுணுக்கமெல்லாம் புரிந்து விட்ட பாவனையில் அவன் பேத்தி, "புரிஞ்சு போச்சு, தாத்தா!"- என்று முகம் மலர்ந்து கூறினாள். கூடையை எடுத்துக் கொண்டு தெருவுக்குச் சென்றாள். கேட்டவர்களுக்கெல்லாம் அள்ளி அள்ளிக் கொடுத்தாள். அவர்கள் கொடுத்த காசை வாங்கிக் கொண்டு வந்தாள். அன்றைய விற்று முதல் ரூபாய் ஒன்றேகால்தான். நல்ல விலைக்கு விற்று வந்ததாகக் கிழவன் சந்தோஷப்பட்டான்.

மறு நாள் கொஞ்சம் கூடவே பூ கிடைத்தது. ஒன்றரைக் கூடை இருக்கும். அதை எடுத்துச் சென்றாள். அள்ளி அள்ளிக் கொடுத்தாள். ஆனால் ரூபாய் மட்டும் அதே ஒன்றேகால் தான் கொண்டு வந்தாள். அதற்காகத் தாத்தா சிறிதும் கவலைப்படவில்லை.

சில நாட்கள் கழித்துப் பூ குறைய ஆரம்பித்தது. ஆனால் விற்பனைத் தொகை குறையவில்லை. அந்தத் தெருவில் உள்ள இருபது வீட்டுக்காரர்களும் அவளிடம் வாடிக்கையாகப் பூ வாங்க ஆரம்பித்தனர். எவ்வளவு புஷ்பம் கிடைத்தாலும் அவ்வளவையும் அந்தத் தெருவில் உள்ளவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டுக் கடைசிப் பங்கு பூவை எடுத்துக் கொண்டு தெருக் கோடியில் தேர் முட்டியில் வீற்றிருக்கும் ஹனுமானின் தலையில் போடுவாள். சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பாள்.

அப்போது அவளுக்குத் தோட்டத்துக் குரங்கின் ஞாபகம் வரும். அது ஒரு பூ

அகப்பட்டவுடன் அதைக் கசக்கி எறியத் துடிப்பது ஞாபகம் வரும். 'இந்த ஹனுமானும் தலையில் விழுந்து குறுகுறுக்கும் பூவைக் கசக்கி எறிய விரும்புவது போலவும், ஆனால் கூப்பிய கைகளைப் பிரிக்க முடியாமல் அந்த விக்கிரகம் அவஸ்தைப் படுவது போலவும் அவளுக்குத் தோன்றும். பிறகு தானாகவே வழிநெடுகச் சிரித்துக் கொண்டே வீட்டுக்குப் போவாள்.

பூ குறைந்த அன்றைக்குத்தான் அவளுக்கும் வருத்தமாக இருக்கும். "அம்மா இன்னிக்குக் கூடை நிரம்பலே இல்லே, அம்மா!" என்று அங்கலாய்த்துக் கொண்டே கொடுப்பாள். அவளுக்குத் திருப்தியே யிராது. "இந்தாங்க அம்மா இதையும் எடுத்துப் போங்க" என்று மறுபடியும் இரண்டு பூவை எடுத்துக் கொடுப்பாள். அதற்காக யாரும் அவளுக்குக் கொடுக்கும் வாடிக்கைத் தொகையைக் குறைத்துக் கொடுப்பதில்லை.

அவளுக்கு எத்தனையோ போட்டிக்காரர்கள் வந்தார்கள். மலிவு நாட்களில் பெரிய பெரிய பந்துகளைக் காட்டி விலை குறைத்துக் கூறுவார்கள். ஆனால் கிராக்கி நாட்களில் அவர்கள் அந்தத் தெருவில் அடியெடுத்து வைக்க முடியாது. கிராக்கி நாட்களில் பூ வியாபாரிகள் பல பேர் வந்து நல்ல விலைக்கு அதிகப்படியான பூவை வாங்கிக் கொள்ளுவதாக அவளுக்கு ஆசை காட்டுவார்கள். ஆனால் அவள் அதற்கெல்லாம் கட்டுப்படுவதில்லை. கிராக்கி நாட்களில் அந்தத் தெருவுக்குப் பூ கட்டாமல் போவதுமில்லை! மலிவு நாட்களில் அந்தக் குட்டியின் பூ விற்காமல் தெரு மூலைகளில் சந்தி சிரிப்பதுமில்லை.

வருஷங்கள் ஆக ஆக அவள் அந்தத் தெருவில் உள்ளவர்களுக்குக் கொடுக்கும் மலர்களுக்கும் அவளுக்கு அவர்கள் கொடுக்கும் பணத்துக்கும் கணக்கே இல்லாமற் போய் விட்டது. கொடுக்கும் தொகைக்கு அதிகப் பூ வாங்குவதாகப் பெண்மணிகள் . நினைப்பார்கள்.

அந்தக் குட்டிக்கு அதெல்லாம் ஒன்றும் தெரியாது. பொருளுக்கும் பணத்துக்கும் உள்ள சம்பந்தத்தைப் பெரிய பெரிய பொருளாதார நிபுணர்கள் துலக்க முடியாமல் தவிக்கும் போது அவள், "பொருளுக்கும் பணத்துக்கும் சம்பந்தமில்லை. சம்பந்தம் இருக்கவும் முடியாது. இருப்பதும் நல்லதல்ல..." என்பாள். இந்தப் பெரிய கொள்கையை அவள் ஏழு வருஷம் பாடுபட்டு அறிந்தாள்.



அவள் வரையில் அவளுக்கு வெற்றிதான். தீபாவளி வந்து விட்டால் ஒவ்வொரு வீட்டாரும் போட்டி போட்டுக் கொண்டு அவளுக்குத் துணிமணிகள் வாங்கிக் கொடுப்பார்கள். முதல் வீட்டில் கொடுத்ததை அங்கேயே உடுத்திக் கொண்டு பழைய துணியைக் கூடையில் இடுக்கிக் கொள்வாள். அடுத்த வீட்டுக்கு வருவாள். அங்கு கொடுப்பதை அங்கேயே உடுத்திக் கொண்டு முதல் வீட்டில் கொடுத்ததைச் சுருட்டிக் கொள்வாள். இப்படி ஒவ்வொரு வீடாக மண்டகப்படி நடக்கும். அவள் அறியாத கல்யாணம் கிடையாது, காதல் கிடையாது!

அவள் குரல் கொடுத்தால் வீடு வீடாக ஆனந்தம் துளிக்கக் கேட்பானேன்? 'எல்லோருக்கும் சமமாக என் கருணை கிட்டும்' என்ற கடவுளின் கட்டளையைக் கோயில் மணி ஓசை யிடுவதுபோல் 'எல்லோருக்கும் சமமாக என் மலர்கள் கிட்டும்' என்று அந்தக் குட்டிக் குரல் அன்புடனும் அதிகாரத்துடனும் ஆணையிட்டுக் கூறும். அவளிடம் யாரும் 'பிகை' முடியாது; வேண்டாம் என்று தள்ள முடியாது.

அன்றும் அப்படித்தான் குரல் கொடுத்தாள். ஆனால் ஒரு வீட்டில்—மேலக் கோடி வீட்டுக்கு அடுத்த கீழ் வீட்டிலிருந்த பார்வதி அந்தக் குரல் கேட்டுத் திடுக்கிட்டாள். அவளுக்கு உடல் வியர்த்தது. 'பாவம்!...அந்தக் குட்டிக்கு .........'

இன்று தீபாவளி எல்லாரும் இனாம் கொடுப்பார்கள். அவளும் கொடுக்க வேண்டுமென்றுதான் ......

நேற்று கடையிலே அவள் கணவன் சுந்தரத்துக்கும் அவளுக்கும் ஒரு வாக்குவாதம் முற்றி விட்டது. "அந்தக் குட்டிக்குப் பட்டும் நூலும் கலந்த சிற்றாடை நன்றாக இருக்கும்" என்றாள் அவள்.

"அது பதினொரு ரூபாய்" என்றான் அவன்.

"போனால் போகட்டும். வாங்கி விடுங்கள்."

"உனக்குப் பதினைந்து ரூபாய்க்குப் புடவை. எனக்கு மூன்று ரூபாய்க்கு மல் வேட்டி.. பூக்காரக் குட்டிக்குப் பதினொ...ரு ரூபாய்க்குச் சிற்றாடையா.?"

"அதனால் என்ன? அந்தக் குட்டி சந்தோஷப் படும். போனால் போகிறது. வாங்கி விடுங்கள்..." என்று அழுத்தமாக, ஆனால் பணிவுடன் பிடிவாதம் பிடித்தாள் பார்வதி. வேறு வழியின்றி வாங்கி விட்டுச் சுந்தரம் வழி நெடுக முணு முணுத்துக் கொண்டே வந்தான்.

"எந்தக் குடும்பம் உருப்படும்? ......... இது என்ன அக்கிரமம்? ...... ரூபாய்க்கு மதிப்புத் தெரி

வாமல்...இப்படியும் ஒரு அநியாயம் உண்டா?...... சம்பாதிக்கிறவனுக்குத் தெரியும் பணத்தின் அருமை......!"

பார்வதி பதில் பேசவில்லை.

வீட்டுக்கு வந்தனர். பூக்காரக் குட்டி காத்திருந்தாள்.

"இந்தாங்கம்மா!...... பூ! எத்தனை நாழிகை காத்திருந்தேன். தெரியுமா? காலையிலே நல்ல நாளும் பெரிய நாளுமா உங்களைப் பூவுக்கு நின்னுடாட விட்டுப் போகக் கூடாது என்று இங்கேயே உட்கார்ந்து விட்டேன் அம்மா."



"கடைக்குப் போனேன். நாழிகையாகி விட்டது"—என்று சொல்லிக் கொண்டே அவள் கொடுத்த பொட்டணத்தை வாங்கிக் கொண்டு உள்ளே நடந்தாள் பார்வதி. குட்டியும் தன் பூக்கூடையுடன் நகர்ந்தாள்.

"ஏ, குட்டி!" என்று கூப்பிட்டான் சுந்தரம்.

"ஏன் சாமி?"

"இந்தப் பூ என்ன விலை?"

"என்ன சாமி இப்படிக் கேட்கிறீங்க?"

"கேட்டா விலை சொல்ல வேண்டியது தானே நீ?"

"நான் என்னத்தைச் சாமி கண்டேன். இதுதான் அஞ்சு ரூபாய், இதுதான் பத்து ரூபாய்."

"நீ சொல்ல மாட்டாயா? அஞ்சாம் பத்தாம். இந்தப் பைத்தியங்களுக்குப் புத்தி கிடையாது. கடைத் தெருவிலே பூ சிரிப்பாய்ச் சிரிக்கிறது. இவள் என்னடா வென்றால் அதட்டிக் காசு வாங்கிக் கொண்டு போய் விடுகிறாள்!"

"சாமி! சாமி! என்ன வெல்லாமோ சொல்றீங்களே!"

பார்வதி குறுக்கிட்டாள்: "குட்டி! நீ போய்விடு! ஐயாவுக்கு ஒன்றும் தெரியாது."

"எனக்கு ஒன்றும் தெரியாதா? பார்வதி! நீ என்ன நினைத்துக் கொண்டாய்? இவளிடம் உனக்கென்ன அவ்வளவு அங்கலாய்ப்பு? இவள் கொடுக்கிற பூவுக்குச் சிற்றாடை வேறு கேடா?" என்று ஆத்திரம் படபடக்கப் பேசினான் சுந்தரம்.

பார்வதி வாயடைத்து நின்றாள். குட்டிக்கு இது ஒரு புது அநுபவம். என்ன சொல்லுவதென்றே புரியாமல் நகர்ந்து விட்டாள்.

அன்று காலையில் தீபாவளி ஸ்நானம் ஆயிற்று. பட்சணம் தின்ற மூறுக்கில் சுந்தரத்துக்கு அற்புத யோசனை தோன்றிற்று. கடைத் தெருவுக்குப்போய்ச் சிரிப்பாய்ச் சிரிக்கிற பூவில் கொஞ்சம் வாங்கி வரலாம்என்று கிளம்பினான்.

பார்வதி தனியே உட்கார்ந்து கொண்டு கலங்கினாள். பூக்காரி வரும் நேரமாகி விட்டது. அவள் குரலும் கொடுத்தவுடன் 'இவர் ஏசி விட்டாரே! அந்தக் குட்டி என்ன நினைத்ததோ? இன்று வருமோ, வராதோ?' என்று பலவாறாக நினைத்தாள்.

அடுத்த வீட்டில் கொடுத்த பச்சைச் சிற்றாடையைக் கட்டிக் கொண்டு, அது உடலில் ஒட்டாமல் மொட மொட வென்று நிமிறி நிற்க—அவள் புன்முறுவல் பூத்து நின்றாள். பார்வதிக்கு அந்தக் குட்டியின் நிறைந்த மனமே பூத்துப் பரவி விட்டது போல் தோன்றிற்று.

"இந்தாங்க, அம்மா, பூ!"

பார்வதி தயங்கினாள்.

"ஐயா, சொன்னால் சொல்லி விட்டுப் போறாங்க, அம்மா! அதனாலே எனக்கு ஒண்ணும் குறைந்து போய் விடாது......" என்றாள் குட்டி.

சுந்தரமும் வந்து விட்டான். அவனைக் கண்டதும் பார்வதி உள்ளே போய்விட்டாள்.

"ஐயா! இந்தப் பூவைக் கொண்டுபோய் அம்மாவிடம் கொடுத்திடுங்க..." என்று ஒரு பெரிய கதம்பப் பொட்டணத்தை அவனிடம் கொடுத்தாள்.

"இரு, வந்து விட்டேன்......" என்று உள்ளே சென்றான் சுந்தரம்.

"பார்வதி! இந்தப் பூவுக்கு எவ்வளவு கொடுக்கணும்?" என்று கேட்டான்.

"தினம் ஓரணாத்தான்."

"ஓரணாத்தானா?"

"ஆமாம், ஏன்?"

"இல்லை..." என்று இழுத்தான். கடைத் தெருவில் சற்று முன்பு அந்தக் கடைக்காரன், காய்ந்து புழுதி படிந்து வெறும் பச்சிலை மயமான ஒரு பந்தை வைத்துக் கொண்டு பேசின பேச்சு......"ஓரணாவை எக்கிலே முடிஞ்சுக்கிட்டு கடைத் தெருவுக்

குப் பூ வாங்க வந்துட்டாரு. ஆளைப் பாரு ஆளை!"

சுந்தரம் குமுறினான். பீரோவைத் திறந்து முதல் நாள் வாங்கிய சிற்றாடையை எடுத்தான். "இந்தப் புடவைக்கு குங்குமம் தடவு" என்று மனைவியிடம் கொடுத்தான். "ஏ, குட்டி! இங்கே வா" என்று கூப்பிட்டான். உடனே அந்தப் பூக்காரிக் குட்டியும் ஆடி அசைந்துகொண்டு உள்ளே வந்து நின்றாள்.



"இந்தா, இந்தச் சிற்றாடையை வாங்கத்தான் நேற்று ரொம்ப நாழிகை அலைந்தோம்......" என்று சொன்னான் சுந்தரம்.

உண்மையிலேயே சுந்தரத்துக்கு மனம் கனிந்து விட்டது. தான் பெரிய மனத்துடன் நிறைய ரூபாய் கொடுத்து அந்தச் சிற்றாடை வாங்கியதை அவள் உணர வேண்டும் என்று நினைத்தான்.

"நன்றாக இருக்கிறது அம்மா" என்று வாங்கி ஆவலுடன் உடுத்திக் கொண்டாள்.

சுந்தரத்துக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. தன் மனம் எவ்வளவு விசாலமானது என்பதை மேன் மேலும் விளக்கிக் காட்ட விரும்பினான். "ஏ, குட்டி! இந்தச் சிற்றாடை என்ன விலை என்று உனக்குத் தெரியுமா?" என்று பெருமிதத்துடன் கேட்டான்.

"எனக்கு என்னத்துக்கு சாமி விலை யெல்லாம்? உங்கள் அபிமானம் போதாதா?" என்று சொல்லிக் கொண்டே உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்க அவ்விட்டை விட்டுச் சென்றாள் அந்தப் பூ விற்கும் குட்டி.

# படித்துப் பாருங்கள்!

## "தமிழ் நாடு"

பாரத மக்களின் உரிமைகள் பெருகி யிருக்கின்றன. வாக்காளர்களின் தொகை மூன்றரைக் கோடியிலிருந்து பதினேழரைக் கோடியாகப் பெருகியிருக்கிறது. இதற்கு ஏற்றவாறு படிக்கத் தெரிந்தவர்களின் தொகையும் பெருக வேண்டாமா! மற்ற நாடுகளைப்போல் படிக்கத் தெரிந்தவர்களின் தொகை தொண்ணூறு அல்லது தொண்ணூற்றைந்து சதவிகிதம் பெருகாவிடினும், தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் அதிகாரம் பெற்றுள்ள பதினேழரைக் கோடி வாக்காளர்களாவது படிக்கத் தெரிந்தவர்களாக இருக்க வேண்டியது அவசியம் அல்லவா!

பாரத நாட்டில் உள்ள இந்தக் குறையை நிவர்த்திக்கும் பொறுப்பை உடனடியாகப் பத்திரிகைகள் தான் ஏற்றுக் கொள்ளவேண்டும். மாகாணத்தின் தலைநகரில் மாத்திரமல்ல, பல முக்கிய நகரங்களிலும் பத்திரிகைகள் தோன்றிச் சிறந்த முறையில் நடைபெறுமாயின், படித்து விஷயங்களைத் தெரிந்துகொள்ள விரும்புவோரின் தொகை அதிகமாகும் என்பது நிச்சயம்.

எனவே மதுரை மாநகரிலிருந்து சென்ற மாதம் முதல் "தமிழ் நாடு" என்ற தினசரிப் பத்திரிகை ஆரம்பமாகி யிருப்பதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறோம். பிரபல தொழில் அதிபரும், பொது விஷயங்களில் மிக்க ஆர்வம் உள்ளவரும், தலைசிறந்த தமிழ் அபிமானியுமான ஸ்ரீ கருமுத்து தியாகராஜன் செட்டியாரை நிர்வாக ஆசிரியராகக் கொண்டு "தமிழ் நாடு" எடுத்த எடுப்பிலேயே ஏராளமான செய்திகளுடன் வெளிவரத் தொடங்கி யிருக்கிறது.

"நம் நாட்டில் அறியாமையைப் போக்கி, கல்விச் செல்வத்தை வளர்க்கும் கலை நிலையங்கள் ஆயிரக் கணக்கில் தோன்ற வேண்டும். எச் சாதியினரும் எம் மதத்தினரும் எவ்வித நிலையினரும் இந்நாட்டு மக்கள். ஒருவித பேதமுமின்றி அவர்கள் எல்லாருக்கும் சம உரிமைகள் உண்டு" என்று அப் பத்திரிகை தலையங்கம் ஒன்றில் முழங்குகிறது. "தமிழ் நாடு" நாளுக்கு நாள் வளர்ச்சி பெற்று வெற்றிகரமாய்த் தொண்டு புரிந்து வருமாக!

(ஆசிரியர்: இ. மாணிக்க வாசகம், பி. ஏ., 115, மூனிச்சாலை ரஸ்தா, சந்திரா அச்சகம், மதுரை.)

## அழகு மயக்கம்

ஆண் மகன் அழகைக் கண்டு மயங்குகிறான்: அதில் ஈடுபடுகிறான். அதை விடப் பேரழகு ஒன்றைக் கண்டு விட்டால் மீண்டும் சபலம் அடைகிறான். மலருக்கு மலர் தாவும் வண்டின் தன்மையையுடைய ஆண்களை இடித்துக் காட்டும் விதத்தில் அமைந்திருக்கிறது, "அழகு மயக்கம்" என்ற நாடகம். இதே மாதிரி இன்னும் நான்கு ஓரங்க நாடகங்கள் இருக்கின்றன இந்நூலில். ஒவ்வொன்றும் ஒவ்வொரு கலையைக் கொண்டு அமைந்து கலை நிறைந்து விளங்குகிறது. பாத்திரங்களின் தன்மை அவர்களுடைய சம்பாஷணை வாயிலாகவும், நடத்தை வாயிலாகவும் வெளியாவதுதான் சிறந்த நாடகத்தின் லக்ஷணம். பாத்திரங்கள் அடிக்கடி தாமே பேசுதல், நெடுஞ்சொல் இசைத்தல் என்கிற முறையில் அவர்களுடைய தன்மை வெளிப்படுதல் அவ்வளவு சிறந்ததன்று. இந்தத் தத்துவம் இந்நூலில் நன்கு கையாளப் பட்டிருக்கிறது.

ஆசிரியர்: பெ. தூரன்; பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை 15; விலை ரூ. 1—8—0.


அதிக
மலர்ச்சியைத்தருவது...
ஹிமாலயா
புக்கே
டாய்லட், டால்கம் பௌடர்களின்
இனிமையான பரிமளம்
Himalaya Bouquet
Himalaya Bouquet
உங்கள் அழகு பராமரிப்புக்கு வாசனையுடைய ஹிமாலயா புக்கே பௌடர்கள் மிகவும் சிறந்தவை. அவை பட்டு போல் மிருதுவாக இருக்கின்றன. உங்கள் சருமத்திற்கு சாந்தியை அளிக்கின்றன. அவைகளின் நீடித்திருக்கும் வெகு நேர்த்தியான பரிமளம் உங்களை மலர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.
நேர்த்தியான
இரண்டு இராஸ்மிக் தயாரிப்புகள்
HBP. 4-X30 TM

# கமலியின் தலை தீபாவளி

### எம். எஸ். ஆர்.

மாலை ஐந்தரைமணி மயிலாப்பூர் கடற்கரையில், கைகளால் முழங் கால்களைக் கட்டிக்கொண்டு கடலை நோக்கியவாறு உட்கார்ந்திருந்தான் சுந்தரராமன் பி. ஏ. எல். டி. அடுக்கடுக்காய் எழுந்து மோதிய அலைகளின் அழகை அவன் ரசிக்கவில்லை. அவன் கண்களில் விரக்தி குடி கொண்டிருந்தது.

அன்று முதல் தேதி. அவன் சட்டைப் பையில் ரூ 127—2—0 அடக்கம் செய்யப்பட்டிருந்தது. பள்ளிக்கூடத்தில் மாதம் முழுவதும் மாணவர்களைக் கட்டி மேய்த்ததற்குக் கூலியாக அவனுக்குக் கிடைத்த சம்பளத்தில் 'பிராவிடண்ட் பண்டு'க்கு கொடுத்தது போக மிச்சமிருந்த பணம்தான் அது. சம்பளம் வாங்கியதின் உற்சாகம் அவன் முகத்தில் காணப்படவில்லை. அவன் மனம் கவலையில் ஆழ்ந்து கிடந்தது.

"அந்தப் பணத்தை எதற்கென்று செலவழிப்பது! போன மாதமும் அதற்கு முன்பும் வாங்கியிருந்த கடன்களைத் திருப்பிக் கொடுப்பதா! அல்லது வரப்போகிற முப்பது நாட்களுக்கும் வேண்டிய செலவுக்கென்று வைத்துக்கொள்வதா!

மயிலாப்பூரில் அவன் குடியிருக்கிருனே- காற்று உள்ளே புகுந்தறியாத, புகை வெளியே போய்க் கண்டிராத, வெளிச்சம் எட்டிப் பார்க்கக்கூட முடியாத - அந்தப் போர்ஷனுக்கு வாடகை முப்பது ரூபாய்! வீட்டுச் சொந்தக்காரன் இரண்டாம் தேதி காலையில் வாடகைக்குத் தயாராய் வந்துவிடுவான். ரேஷனுக்கும் விறகுக்கும் முன்னதாகப் பணத்தை எடுத்து வைத்து விடவேண்டும். அப்புறம் பால்காரன், மளிகைக் கடைக்காரன் எண்ணெய்க்கடை செட்டியார்—எல்லோரும் இருக்கவே இருக்கிறார்கள். இவ்வளவு பேருக்கும் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து ஆள் மீண்டு வருவதே கஷ்டமாயிருக்கிறது.

இந்த அழகில் கமலியின் தலை தீபாவளி வேறு வருகிறது. ஒன்றுமில்லையென்றாலும் கமலிக்கு பட்டுப் புடவையும், அவள் கணவன் சத்ருக்னருக்குச் சரிகை வேஷ்டியும் வாங்கியாக வேண்டும். ராஜத்துக்கு - சுந்தரராமன் மனைவி - நூல்புடவை வாங்கினாலும் போதும். அதுவேதான் இந்த நாளில் இருபத்தைந்து முப்பது ரூபாய் ஆகிவிடுகிறதே! எப்படியும் குறைந்தது இருநூறு ரூபாயாவது இல்லாமல் தீபாவளி வந்து விட்டுப் போகாது. ஏற்கெனவே கமலியின் கல்யாணத்திற்கென்று ஊரிலிருந்த வீட்டையும், நிலத்தையும் விற்றுச் செலவு செய்தாகி விட்டது. இப்பொழுது மறுபடியும் பணத்துக்கு எங்கே போவது! யாரைக் கேட்பது!

"அப்பப்பா! நெருக்கடி! நெருக்கடி! எப்பொழுது பார்த்தாலும் பணத்துக்கு நெருக்கடிதான்! கொஞ்சங்கூட மனச் சந்துஷ்டி இல்லாமல், என்ன உத்தியோகம், என்ன குடும்பம் வேண்டிக் கிடக்கிறது! வெளிக்குப் பகட்டாக வேஷ்டி சட்டை போட்டுக்கொண்டு டாம்பீக வேஷம் போடுவதுதான் மிச்சம். உள்ளுக்குள்ளே தரித்திரம் ஆளையே அரித்துவிடுகிறது."

இப்படி யோசனையில் ஆழ்ந்தபடியே சுந்தரராமன் உட்கார்ந்து விட்டான். கடலிலிருந்து குளிர்ந்த காற்று வீசிய போதிலும், அவன் முகத்தில் முத்து முத்தாய் வியர்வை அரும்பியிருந்தது!

## 2

சுந்தரராமன் இரண்டு வயதுக் குழந்தையாக இருந்தபோது, அவனுடைய தாயார் இறந்து விட்டாள். பிறகு அவன் தகப்பனார் சபேசய்யர் பாகீரதியை மணந்து கொண்டார். தாயில்லாக் குழந்தை என்ற குறையே தோன்றாதபடி பாகீரதி சுந்தரத்தைத் தன் குழந்தையைப்போல் வளர்த்து வந்தாள். நினைவு தெரிந்ததிலிருந்து பாகீரதிதான் சுந்தரத்துக்கு 'அம்மா'வாக இருந்தாள். தந்தையைவிட சித்தியிடம்தான் அவனுக்குச் சலுகை அதிகமாக இருந்தது.

சுந்தரத்துக்கு, எட்டு வயது ஆனபோது கமலி பிறந்தாள். தங்கையிடம் அவன் அளவற்ற ஆசை வைத்திருந்தான். கமலியும் 'அண்ணு, அண்ணு' என்று எப்பொழுதும் அவனுடனேயே சுற்றிக் கொண்டிருப்பாள். இரண்டு பேருக்கும் விளையாட்டுக்குக்கூடச் சண்டை வராது. அத்தனை ஒற்றுமையாக இருந்தார்கள்.

'மெட்ரிகுலேஷன்' பாஸ் ஆனவுடன் அவன் தகப்பனார் படிப்பை நிறுத்திவிட வேண்டுமென்று எண்ணினார். "இருக்கிற ஒருவேலி நிலத்தை வைத்துக்கொண்டு குடும்பம் பண்ணுவதே கஷ்டமாக இருக்கிறது. இதிலே காலேஜ் படிப்புக்கென்று கடன் வாங்கிவிட்டால் அதை அடைப்பது எப்படி! அதோடு கமலிக்குக் கல்யாணம் வேறு ஆகவேண்டியிருந்தது. எல்லாம் படித்த வரையில் போதும்" என்று சொல்லிவிட்டார்.

ஆனால் பாகீரதிக்கு அதில் சம்மதமில்லை. "நம்ம கஷ்டத்தையே பெரிசாய் எண்ணிக்கொண்டு, படிக்கிற குழந்தையை ஏன் வீணாய்க் கெடுக்க வேண்டும்! நாளைக்கே பி. ஏ. பாஸ் பண்ணினான் என்றால், ஒரே வருஷத்தில் சம்பாதித்துக் கொடுத்து விடுகிறான். கமலியின் கல்யாணத்திற்கு அதற்குள்ளே என்ன அவசரம் வந்தது! அதைப்பற்றி நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். எல்லாம் சுந்தரம் சம்பாதிக்க, இரட்டை மேளம் வைக்க, ஜமாய்ச்சுடுவான். பேசாமல் நாளைக்கே அவனைக் காலேஜில் கொண்டுபோய்ச் சேர்த்து விடுங்கள்" என்று சொன்னாள். அதற்கு மேல் சபேசய்யர் மறுத்துச் சொல்லவில்லை.

வருஷங்கள் நான்கு ஓடி மறைந்தன. சுந்தரம் பி. ஏ. பாஸ் செய்ததைக் கேட்ட சந்தோஷத்துடனேயே சபேசய்யர் இந்த உலகத்தை விட்டுப் போய் விட்டார்.

சுந்தரராமன் கிராமத்தில் உட்கார்ந்தபடி உத்தியோகத்துக்கு மனுக்கள் எழுதிப் போட்டுப் பார்த்தான். மனுக் கணக்கில் பேப்பர் செலவழிந்ததைத் தவிர, வேறு பலன் ஒன்றும் இல்லை. கடைசியில் வேறு வழியில்லாமல், சைதாப் பேட்டைக்குச் சென்று, ஒன்பது மாதங்களை ஓட்டி, எல். டி. பட்டம் பெற்று, சென்னையி

லேயே ஒரு ஸ்கூலில் ஆசிரியரானன். பின்னர் தன்னுடைய சித்தியையும், கமலியையும் அழைத்து வந்து குடித்தனம் வைத்தான்.

இந்தச் சமயத்தில் அவனுக்குக் கல்யாணம் ஆயிற்று. சித்தியாகப் பார்த்து ஆசைப்பட்டு, ராஜத்தை அவனுக்குக் கல்யாணம் பண்ணி வைத்தாள். கல்யாணத்தின் மூலமாக அவனுக்கு நிறையப் பணம் கிடைக்கா விட்டாலும், ராஜம் அழகிலும் குணத்திலும் குறைவற்றவளாக இருந்தாள். அந்தமட்டில் அவன் திருப்தியுடன் இருந்தான்.

மறு வருஷம், அவன் சித்தி கமலியை அவனிடம் ஒப்படைத்துவிட்டு, இரண்டு நாள் ஜுரத்தில் கண்ணை மூடிக்கொண்டு விட்டாள். பாவம், சுந்தரராமன் சம்பாதித்துத் தகப்பனார் பட்ட கடனை அடைப்பதையோ, இரட்டை மேளம் வைத்து, கமலிக்குக் கல்யாணம் செய்வதையோ அவள் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை!

காலேஜ் படிப்புக்கு சபேசய்யர் வாங்கின கடன் வட்டியுடன் குட்டிபோட்டுப் பெருகிக் கொண்டு வந்தது. அவன் சம்பளமோ குடும்பம் நடத்து வதற்கே போதும் போதாததாக இருந்தது. அத்துடன் கமலிக்குக் கல்யாணம் பண்ணவேண் டிய பருவமும் வந்துவிட்டது. ஆகவே வேறு வழியின்றி, ஊரிலிருந்த நிலத்தையும் வீட்டையும் விற்று விட்டான்.

அந்த வருஷம் ஆவணி மாதத்தில் தான் கமலிக்குக் கல்யாணம் ஆயிற்று. அவள் கணவன் ராமச் சந்திரன் பம்பாயில் ஒரு கம்பெனியில் இருநூறு ரூபாய் சம்பளத்தில் உத்தியோகத்திலிருந்தான். கமலியின் கல்யாணத்துடன், வீடும் நிலமும் விற்ற பணம் தீர்ந்து போய் விட்டது.

அந்த வருஷம் தலை தீபாவளி கொண்டாடியாக வேண்டும். தீபாவளிக்கு மாப்பிள்ளை சந்துருவை வரச் சொல்லி, கடிதமும் எழுதியாகிவிட்டது. பணத்துக்கு என்ன செய்வது என்ற யோசனை யில் தான், கடற்கரையில் உட்கார்ந்து, சுந்தர ராமன் கவலைப்பட்டுக் கொண்டிருந்தான்.

அவன் வீட்டுக்கு வரும்போது மணி எட்டடித்து விட்டது. வாசலில் கமலி அவனை எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தாள். அவனைப் பார்த்ததும் "ஏன் அண்ணா, இன்றைக்கு இவ்வளவு நாழி!" என்று கவலையுடன் கேட்டாள்.

சுந்தரராமன் சம்பளப் பணத்தை அவள் கையில் கொடுத்து விட்டு, "விசேஷம் ஒன்றுமில்லை, கமலி. பொழுது போகவில்லை என்று கடற் கரைக்குப் போயிருந்தேன். நேரம் போனதே தெரியவில்லை" என்று சொல்லிவிட்டுப் பின்புறம் போனான்.

கமலி உள்ளே சென்று மன்னியிடம் பணத்தைக் கொடுத்துவிட்டு, அவளுக்கு உதவி செய்வதில் ஈடுபட்டாள்.

## 3

சாப்பிட்டுவிட்டு மாடி வராந்தாவில் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தான் சுந்தர ராமன். ஆகாயத்தில் ஆயிரக் கணக்கான தாரகைகள் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன.

கமலி மெதுவாக அவன் பின்னால் வந்து நாற் காலியைப் பிடித்துக்கொண்டு சற்று நின்றாள். அவள் கையில் ஒரு கடிதம் இருந்தது. சுந்தர ராமன் கமலி வந்ததைக்கூடக் கவனிக்கவில்லை. அவ் வளவு தீவிரமாக யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

அவள் மெதுவாகக் கூப்பிட்டாள்: "அண்ணா!"

சுந்தரராமன் திடுக்கிட்டுத் திரும்பி "கமலி, வா அம்மா! இப்படி வந்து உட்கார்ந்து கொள்!" என்று கூறினான்.

"ஒன்றுமில்லை...மன்னி தனியாகக் கீழே இருக்கிறாள். நான் போகிறேன், அண்ணா!"

"அடேடே! என்னம்மா அது கையில்! கடிதமா! யார் எழுதியிருக்கா!"

"பம்பாயிலிருந்து வந்திருக்கு, அண்ணா!"

"ஓ! சந்துரு எழுதியிருக்காரா! அதுதான் இத்தனை வெட்கமோ! தீபாவளிக்கு எப்போ வரப் போறாராம்! என்ன எழுதியிருக்கிறான்!" என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

கமலி பதில் சொல்லவில்லை. பேசாமல் கடி தத்தை அவன் கையில் கொடுத்து விட்டுக் கீழே போய் விட்டாள். 'அரிக்கன் லாந்த'ரைப் பெரி தாக்கிக் கொண்டு, கடிதத்தைப் பிரித்தான்:

"அநேக நமஸ்காரம். தாங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. தீபாவளிக்கு ஒரு வாரம் லீவில் வரலாம் என்றிருக்கிறேன். தீபாவளி ஆனவுடன் நான் திரும்பி வரும்போது, கமலியையும் அழைத்து வந்துவிட வேண்டுமென்று அம்மா சொல்லிக் கொண்டிருக்கிறாள். நிற்க.

கமலாவின் கல்யாணத்தின் போதே பல விஷ யங்களில் என்னை ஏமாற்றி விட்டீர்கள். அவ ளுக்கு உருப்படியான நகைகளே இல்லை என்று தெரிகிறது. இந்தத் தீபாவளியை உத்தேசித் தாவது நீங்கள் ஆறு பவுனுக்குக் குறையாமல் 'செயின்' பண்ணிப் போட வேண்டும் என்று அம்மா அபிப்பிராயப்படுகிறாள்.

செயின் போட்டு விட்டதாக உங்களிடமிருந்து கடிதம் வந்தால் நான் புறப்பட்டு வருகிறேன். இல்லாத வரையில் உங்கள் தங்கை உங்களிடமே இருக்கட்டும்.

இப்படிக்கு,

ராமச்சந்திரன்"

கடிதத்தைப் படிக்கும் போது நல்ல வேளையாக கமலி இங்கு இல்லை. ஏனெனில் அந்தச் சமயத் தில் அவன் முகத்தைப் பார்த்திருந்தாளானால் நிச்சயம் பயந்து போயிருப்பாள்; பேயறைந்தது போல் அவன் முகம் வெளிறி வெறிச்சிட்டிருந்தது. கடிதத்தின் கடைசி வாக்கியம் அவன் மனத்தை உலுக்கிக் குழப்பி விட்டது.

சுந்தரராமன் கமலியின் கல்யாணத்தில் தான் செய்வதாக ஒப்புக் கொண்டதை விட அதிகமா கவே சீர்வரிசைகள் செய்திருந்தான். ஒரு விதத் திலும் குறை வைக்கவில்லை. நாலாயிரம் ரூபாய்



களுக்கு மேல் செலவழித்திருந்தான். எப்படியாவது கமலி கண் கலங்காமல் சந்தோஷமாக இருந்தால் போதும் என்று எண்ணினான். அதற்காக அவன் சித்தி உயிருடன் இருந்த போது 'வீட்டை மட்டும் விற்கவேண்டாம்' என்று சொல்லி யிருந்ததைக் கூடப் பொருட்படுத்தாமல் அதையும் விற்றுக் கல்யாணத்துக்குச் செலவழித்து விட்டான். ஒரு விதத்திலும் சந்துருவை அவன் ஏமாற்றவில்லை.



'சங்கிலி வேண்டுமென்றிருந்தால் சந்துரு அதை உள்ளபடியே கேட்டிருக்கலாம். அதை விட்டு விட்டு, இப்படி வீண் பழி சுமத்தி கடுமைப் படுத்தி யிருக்க வேண்டியதில்லை.

'அது போகட்டும், இப்போதென்று ஆறு பவுன் சங்கிலி எங்கிருந்து வரும்! இப்பொழுது பவுன் விற்கும் விலையில் ஐந்நூறு ரூபாய் ஆயிற்றே! அதற்கு அவன் எங்கே போவான்!

'சங்கிலி இல்லையானால்!......தீபாவளி இல்லை. கமலி இங்கே இருந்துவிட வேண்டியதுதான்! அப்புறம் அவள் கதி!......அப்பப்பா, என்ன பயங்கரம்! கேவலம் ஆறு பவுன் சங்கிலிக்காக உலகமறியாத ஒரு பேதையின் வாழ்வையே பணயம் வைத்து விட்டானே, பாவி! என்ன நகை ஆசை! என்ன கல் நெஞ்சம்!'

## 4

ஆயிற்று. தீபாவளிக்கு இன்னும் ஏழு நாட்களே பாக்கி. சுந்தரராமனுக்கு முள்ளின் மேல் நடப்பதுபோல் இருந்தது. அவன் போகாத இடமில்லை; கேட்காத பேர் இல்லை. எல்லோரும் கைவிரித்து விட்டார்கள். அவரவர்கள் குடும்பம் நடத்துவதே கஷ்டமாயிருக்கும் இந்தக் காலத்தில் அவனுக்கு ஐந்நூறு ரூபாய் கொடுக்க யார் முன் வரப்போகிறார்கள்! அவன் நம்பிக்கை யிழந்து விட்டான். அந்தப் பத்து நாட்களுக்குள் பத்து வயது அதிகமாக ஆகிவிட்டதுபோல் அவ்வளவு தளர்ந்து போய்விட்டான் சுந்தரராமன்.

அன்று இரவு தூக்கமில்லாமல் வெகுநேரம் புரண்டு கொண்டிருந்தான். படுக்கை கொள்ளவில்லை; எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

'பெட்ரூம்' விளக்கு மங்கலாக எரிந்துகொண்டிருந்தது. பக்கத்தில் அவன் மனைவி ராஜம் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். ஏனோ அவளைக் கூர்ந்து கவனித்தான். அவளுடைய நீண்ட நயனங்கள் மூடியிருந்தன. நிச்சலனமான அவள் முகம் தூய்மையுடன் விளங்கியது. அவளுடைய சிவந்தமேனி துவண்டு கிடந்தது. பாவம், நாள் முழுவதும் உழைத்த களைப்பினால் அவள் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள்.

தூக்கத்தில் அவள் புரண்டு படுத்துக் கொண்டாள். அப்பொழுது அவள் கழுத்திலிருந்த சங்கிலி 'பள பள'வென்று மின்னியது. அந்த மங்கலான வெளிச்சத்திலும் அதைப் பார்க்க அவன் கண்கள் கூசின! பாவம், அந்தப் பேதையின் சங்கிலி அவன் கண்களை உறுத்தியது.

அவன் மனம் படபடத்தது. தப்புத்தான்; அந்தச் சங்கிலி அவள் மாமனார் போட்டது. அதற்கும் அவனுக்கும் ஒரு விதமான சம்பந்தமும் கிடையாது. அதைக் கேட்க என்ன உரிமை இருக்கிறது!...ச்! பெண்டாட்டியின் நகையை வாங்கி அடகு வைப்பவன் பெரிய பாதகன்!... அவள் நகையை வாங்கி விற்பது கொலையை விட மோசமான செய்கை! என்று கூடச் சொல்லலாம்!. இவ்வாறு பல எண்ணினான்.

சுந்தரராமன் மறுபடியும் படுத்துக் கொண்டு கண்களை இறுக மூடிக் கொண்டான். ஆனால் அவன் மனம் மட்டும் மூடிக்கொள்ள வில்லை. ஒன்றன் வேகமாக ஓடிற்று. 'ஆனால்......! சங்கிலி இல்லா விட்டால் கமலி கணவன் வீட்டுக்குப்போக முடியாது. அப்புறம் அவள் கதி என்ன ஆவது! இத்தனை நாள் அவன் பட்ட கஷ்டமெல்லாம் வீண்தானா! அவன் செல்வத் தங்கை வாழாதவளாகவே இருந்துவிட வேண்டியதுதானா!' இந்த எண்ணத்தை அவனால் பொறுக்க முடியவில்லை.

மறுபடியும் எழுந்து உட்கார்ந்து விட்டான். அவன் இருதயம் பட படவென்று அடித்துக் கொண்டது. உடம்பு வியர்த்துக் கொட்டியது!

மெள்ள ராஜத்தின் கன்னத்தைத் தொட்டான். பட்டுப்போல் மிருதுவாக இருந்தது. தயக்கத்துடன் மெதுவாகக் கூப்பிட்டான்.

"ராஜம்!"

சட்டென்று அவள் எழுந்து உட்கார்ந்தாள். கண்களைக் கசக்கிக் கொண்டே, "நீங்கள் இன்னுமா தூங்கவில்லை!" என்று கேட்டாள்.

"நான் தூங்கிப் பத்து நாளாகி விட்டதடி. ராஜம், என் கமலிக்கு வாழ்வு கொடுப்பாயா!"

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரே கலவரமாக இருந்தது. பயத்தினால் அவன் கைகளை இறுகப் பிடித்துக் கொண்டு "ஐயோ! இதென்ன உங்கள் கண்கள் இப்படிச் சிவந்திருக்கே! உங்கள் உடம்புக்கு என்ன!" என்று பதட்டத்துடன் கேட்டாள்.

"உடம்புக்கு ஒன்றுமில்லை, ராஜம்! கமலியை நினைக்கும் போது, எனக்குக் கவலை தாங்கவில்லை. நீ மனது வைத்தால்தான் அவளைக் காப்பாற்ற முடியும். அவள் வாழ்வு உன் கையில் இருக்கிறது" என்றான். அதற்குமேல் எப்படிச் சொல்லுவதென்று அவனுக்குத் தெரியவில்லை. என்னவோ சொல்லி, மென்று விழுங்கினான். கடைசியில் தயக்கத்துடன் அவள் சங்கிலியைக் கொடுக்கும்படி கேட்டு விட்டான்!

ராஜம் கொஞ்சம்கூடத் தயங்கவில்லை. "பூ! இவ்வளவுதானே, இதற்கா இத்தனை கலக்கம்! முதலிலேயே கேட்டிருக்கக் கூடாதா!" என்று சொல்லித் தன் சங்கிலியைக் கழற்றி அவனிடம் கொடுத்து விட்டாள். அதை வாங்கும் போது அவன் கைகள் நடுங்கின!

"ராஜம், என் மேல் கோபமா!"

"நல்ல கேள்வி இது! கமலி, நம் குழந்தை தானே! கேவலம் இந்தச் சங்கிலியை நான் போட்டுக் கொண்டால் என்ன, அவள் போட்டுக்கொண்டால் என்ன! எப்படியாவது அவள் க்ஷேமமாயிருந்தால், அதுவே எனக்குப் போதும்! உங்கள் சந்தோஷமே எனக்குப் பெரிய நகையாயிற்றே"

"ராஜும், தெய்வம் பேசுமாடி!" என்றான்.

புஷ்பம் போன்ற தன் விரல்களால் அவன் வாயை மூடினாள். "போதும், உங்கள் ஸ்தோத்திரம்! நாழிகாச்சு; நல்ல வேளையில் படுத்துத் தூங்குங்கள்!" என்றாள்.

## 5

மறுநாள் பம்பாய்க்குத் தந்தி பறந்தது. ராஜுத்தின் சங்கிலி கோவிந்தலால் நகைக் கடைக்குப் போயிற்று. அங்கிருந்த புதிய செயின் ஒன்று கமலியின் கழுத்தில் வந்து பளிச்சிட்டது. தீபாவளிக்கு ஆக வேண்டிய காரியங்கள் மள மளவென்று நடந்தேறின.

தீபாவளிக்கு இரண்டு நாள் முன்னதாகவே ராமச்சந்திரன் வந்து விட்டான்.

கமலி மேல் பார்வைக்குச் சந்தோஷமுள்ளவளாகக் காணப்பட்ட போதிலும், உள்ளுக்குள்ளே குமுறிக் கொண்டிருந்தாள். கணவனின் கடிதம் அவளுக்கு அவனிடம் கசப்பை உண்டு பண்ணியிருந்தது. ஒன்றையும் வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் நடமாடிக் கொண்டிருந்தாள்.

தீபாவளிக்கு முதல் நாள் மத்தியானம் கமலி மன்னியிடம் தலை பின்னிக் கொள்ள வந்தாள். அப்பொழுது ராஜும் சொன்னாள்: "ஆச்சு, இன்னும் இரண்டுநாள் போனால் நீ பம்பாய்க்குப் போய் விடுவாய். அப்புறம் நான் யாருக்குப் பின்னி விடப் போகிறேன்! இந்த வீட்டில் தன்னந் தனியாக உட்கார்ந்திருக்க வேண்டியதுதான். இப்போதே எனக்கு 'வெறிச்'சென்று இருக்கிறதடி."

"எனக்கும் உன்னை விட்டுப் போக வேண்டுமே என்றுதான் இருக்கிறது மன்னி!"

"ஆமாம்; இப்பொழுது அப்படித்தான் சொல்லுவாய். அங்கே போய்விட்டயானால் உனக்குப் போது போய்விடும்!"

"போ, மன்னி! எப்பொழுதும் உனக்குப் பரிகாசம்தான்!"

"இல்லை கமலி, நிஜத்தைத்தான் சொல்லுகிறேன். அங்கே போனதும் எங்களை மறந்து விடாதே! அடிக்கடி கடிதமாவது எழுதிக்கொண்டிரு, அம்மா!"

கமலி சட்டென்று திரும்பி மன்னியைப் பார்க்க உட்கார்ந்து கொண்டாள். "மன்னி, என் வாழ்விற்காக என் சுகத்துக்காக உன் சங்கிலியையே கொடுத்து உதவி செய்திருக்கிறாயே, உனக்கு இந்த ஜன்மத்தில் எப்படி ஈடு செய்யப் போகிறேன்! அண்ணாவும் நீயும் என்னை வாழ்விக்க வந்த தெய்வங்கள் அல்லவா! உங்களை எப்படி மறக்க முடியும், மன்னி!" என்று சொல்லிவிட்டு ராஜுத்தின் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு, குழந்தையைப் போல் விசிக்க ஆரம்பித்து விட்டாள்!

அவளைச் சமாதானப்படுத்துவதற்குள் ராஜுத்துக்கும் போதும் போது மென்றாகிவிட்டது.

அன்று மாலை சந்துரு கமலியைப் பீச்சுக்கு அழைத்துக் கொண்டு போனான். இருவரும் அலை யோரமாக உட்கார்ந்து கொண்டார்கள்.

"கமலி! இப்பொழுதுதான் உன் கழுத்து நிறைந்திருக்கிறது. செயின் உனக்கு எவ்வளவு அழகாயிருக்கு, தெரியுமா!"

அவள் பதில் ஒன்றும் சொல்லவில்லை. தலை குனிந்தபடி மௌனமாக மணலில் ஏதோ கிறுக்கிக்கொண்டிருந்தாள்.

சந்துரு தொடர்ந்து தன் சாமர்த்தியத்தைப் புகழ்ந்து கொண்டான். "உன் அண்ணா என்னை ஏமாற்றிவிடப் பார்த்தார். நானா விடுகிறவன்! பிடிவாதம் பிடித்து, செயினைக் கறந்து விட்டேன் பார்த்தாயா!" என்றான்.

கமலி கோபத்தை அடக்கிக் கொண்டாள். "பாவம், கல்யாணத்தின் போதுதான் அண்ணா உங்களை ஏமாற்றி விட்டார். இப்பொழுதாவது ஏமாறாமல் காரியத்தை சாதித்துக் கொண்டீர்களே, அந்த மட்டும் நீங்கள் ரொம்ப கெட்டிக்காரர்தான்" என்றாள்.

"ஏன் அப்படிச் சொல்கிறாய்!"

"இல்லை, கல்யாணத்தில் அண்ணா உங்களை எந்த விஷயத்தில் ஏமாற்றி விட்டார்! ஏன் அந்த மாதிரி கடிதம் எழுதினீர்கள்!" என்று கேட்டாள்.

"அடி அசடே, அப்படி எல்லாம் எழுதி கடுமைப் படுத்தினால்தானே காரியம் பலிக்கும்! ஏன், அதைப் பற்றி என்ன!" என்றான் சந்துரு.

கமலியின் கோபம் குமுறிக் கொண்டு வெளி வந்தது. "இருந்தாலும் உங்களுக்கு இவ்வளவு பண ஆசை வேண்டியதில்லை!" என்று துணிந்து சொன்னாள்.

"என்ன!" என்று கேட்டான். கமலியின் கேள்வி எதிர்பாராத விதமாக அவனுக்கு அதிர்ச்சியை உண்டு பண்ணிற்று!



முதல் திருடன் :—(திருடினதை எண்ணிக் கொண்டிருக்கும் தன் தோழனைப் பார்த்து) ஏண்டா, வேலை மெனக் கெட்டு எண்ணிப் பார்க்கிறாய்? நாளைக்குத் திருட்டுப் போன விஷயம் பேப்பரிலே வருமில்லே? அப்போது தானே புரிஞ்சு போவுது!

இரண்டாம் திருடன் :—அண்ணே இப்பவெல்லாம் ஐயாயிரம் திருட்டுப் போனாப் பத்தாயிரம்னு பேப்பரிலே போடறாங்க! இப்பவே சரியாக எண்ணிவச்சிக்கிட்டா, நாமே பேப்பரிலே மறுப்புப் போடலாமென்னு தான் எண்ணி வைக்கிறேன்!



"ஏதோ சொல்லுகிறேன் என்று நினைக்காதீர்கள். இதுவரையில் டாக்டர்களுக்கே நான் இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் பீஸாகக் கொடுத்திருப்பேன்!"

"அடாடா! மனசுக்கு ரொம்ப வருத்தமாயிருக்கிறது. முதலிலேயே என்னிடம் வராமல் போய் விட்டீர்களே!

"உங்களிடம் எனக்கு நகை பண்ணிப் போடுவதற்கு வேண்டிய பணம் இல்லையா!"

"அசட்டுப் பெண்ணே! இல்லை என்று யார் சொன்னது! இந்தத் தீபாவளிக்கு மூன்று மாதச் சம்பளம் போனஸாக வந்திருக்கிறது. உன்னை அழைத்துக் கொண்டு போய்க் கல் இழைத்த நெக்லஸ் வாங்க வேண்டுமென்று இருக்கிறேனே. இதோ பார்!" என்று சொல்லி சந்துரு பெருமையுடன் பர்ஸைத் திறந்து ஆறு நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து அவளிடம் நீட்டினான்.

"அமுதான்! உங்களிடம் இவ்வளவு பணம் இருக்கும் போது அண்ணாவை ஏன் இப்படிக் கஷ்டப் படுத்தினீர்கள்!"

"ஓ! அண்ணாவுக்குப் பரிந்து கொண்டு வருகிறாயோ! சரிதான்! அவருக்கென்ன கஷ்டம் வந்தது! நீ இளைய தாயார் பெண் தானே என்று காமம் சார்த்துப் பார்க்கிறார், உன் அண்ணா! நானா ஏமாறுகிறவன்! முடிந்த வரையில் வாங்கவேண்டியதை யெல்லாம் வாங்கி விட மாட்டேனா!"

அவ்வளவுதான்: எரிமலை வெடித்துவிட்டது! கமலி தான் சொல்லுவது என்னவென்று யோசிக்கக்கூடவில்லை. "போதும், உங்கள் சாமர்த்தியம்! என் அண்ணாவுக்கு உங்களை ஏமாற்ற வேண்டுமென்ற எண்ணம் கிடையவே கிடையாது. தயவுசெய்து அவரைப் பற்றி இழிவாக என்னிடம் சொல்லவே சொல்லாதீர்கள்! எனக்குப் பொறுக்கவில்லை. என் அண்ணா ஆயிரத்தில் ஒரு மனிதர்! சொந்தத் தங்கையிடம்கூட ஒருவரும் அவ்வளவு அன்பாயிருக்க மாட்டார்கள்; அந்தளவு ஆசை வைத்திருக்கிறார், அவர்!

"என் கல்யாணத்திற்கென்று ஊரிலிருந்த நிலத்தை யெல்லாம் விற்று விட்டார். அம்மா உயிருடன் இருந்தபோது, 'வீட்டை மட்டும் விற்கவேண்டாம்' என்று சொல்லியிருந்ததைக் கூட லட்சியம் செய்யாமல் அதையும் விற்று கல்யாணத்துக்குச் செலவழித்து விட்டார்" என்று மடமடவென்று பேசிவிட்டாள். உணர்ச்சி மேலீட்டினால், அவள் கண்களில் கண்ணீர் நிறைந்து நின்றது.

"என்ன உண்மையாகவா!" என்று கேட்டான் சந்துரு.

"அதுமட்டுமா! என் மன்னியை என்னவென்று நினைத்தீர்கள்! அவள்தான் எனக்கு வாழ்வு தந்த தெய்வம்! நகை ஆசை உங்கள் கண்களை மூடிவிட்டது. சங்கிலி இல்லாவிட்டால் என்னை அழைக்கப் போவதில்லை என்று எழுதினீர்கள். கேவலம் ஆறு பவுன் சங்கிலியை என் வாழ்வுக்குப் பணயமாக வைத்துவிட்டீர்கள். பாவம், அண்ணா பணமில்லாமல் திண்டாடினார்.

"மன்னி என்ன செய்தாள் தெரியுமா! எனக்கு வாழ்வு கொடுப்பதற்காக, தன் சொந்தச் சங்கிலியைக் கழற்றி அண்ணாவிடம் கொடுத்தாள். உங்கள் திருப்திக்காக—உங்கள் நகை ஆசையைத் திருப்தி செய்விப்பதற்காக—அண்ணா அதை விற்றுத்தான் இந்தச் செயினை வாங்கிப் போட்டிருக்கிறார்!" இதைச் சொல்லி முடித்ததும் அவள் கன்னங்களின் வழியாகக் கண்ணீர் வழிந்தோடியது.

அப்பொழுதுதான் அவன் சுந்தரராமனை நன்றாகப் புரிந்து கொண்டான். அவனுக்குத் தன் செய்கை அளவற்ற வருத்தந்தான் கொடுத்தது.

கமலியின் இரு கைகளையும் பிடித்துக்கொண்டு "அழாதே, கமலி! நான் செய்த தவறுக்கு இப்பொழுதே ஈடுசெய்து விடுகிறேன், பார்! உன்னுடைய செயினை மன்னியிடம் திருப்பிக் கொடுத்து விடு. இப்பொழுதே ஜோஸிந்தலால் கடைக்குப் போய் உனக்கு வேறு செயின் வாங்கி விடுகிறேன்! வா, போவோம்" என்றான். அவன் குரல் தழுதழுத்தது.

## 6

ராஜம் லேசில் செயினைப் போட்டுக் கொள்வதாயில்லை. 'கொடுத்ததைத் திருப்பி வாங்க மாட்டேன்' என்று சொல்லி விட்டாள். ஆனால் சந்துருவும் கமலியும் அவளை விடுவதாக இல்லை. அவர்கள் இதை எதிர்பார்த்து, முன்னதாகவே யோசனை செய்து வைத்திருந்தபடி 'சத்தியாக்கிரகம்' செய்ய ஆரம்பித்தார்கள்.

ராஜம் செயின் போட்டுக் கொள்ளா விட்டால் தீபாவளிக்கு இருக்காமல் அன்றே பம்பாய்க்குக் கிளம்பிவிடுவதாகச் சந்துரு பயமுறுத்தினான்.

கமலி அவனுக்குச் சளைக்கவில்லை. 'மன்னி போட்டுக் கொள்ளாவிட்டால், தனக்கும் வேண்டியதில்லை' என்று சொல்லி தன் செயினையும் கழற்றி வைத்துவிட்டாள். சந்துருவுடன் அவளும் கிளம்பி விடுவதாகச் சொல்லிவிட்டாள்.

கடைசியில் சுந்தரராமன் தலையிட்டு, ராஜத்தை செயினைப் போட்டுக் கொள்ளும்படி செய்து, கமலியையும், சந்துருவையும் சமாதானப் படுத்துவதற்குள் போதும் போதுமென்று ஆகிவிட்டது.

வேறு வழியில்லாமல் ராஜம் செயினைப் போட்டுக்கொண்டாள். அவ்வளவுதான்! சந்துரு—தம்பதிகளின் கோபமும் மாயமாய் மறைந்துவிட்டது. அந்த வீட்டில் சந்தோஷம் பொங்கி வழிந்தது.



# பரம லோபி!

சாமா



சேந்தனூர் என்னும் ஒரு சிறு கிராமத்தில் ஒரு லோபி இருந்தான். பணம் பணம் என்று எப்பொழுதும் பேராசை பிடித்து அலைந்தான். ஒரு சமயம் லோபி வெளியூருக்குப் போய்த் திரும்பினான். வீட்டிற்கு வந்ததும் தன் மடியில் கட்டியிருந்த மணிபர்ஸ் விழுந்து போனதைக் கண்டு, "ரூபாய் 500 போய் விட்டது" என்று அந்த ஊர்த் தலையாரியிடம் தெரிவித்தான். "ஐந்நூறு ரூபாயை யார் கண்டெடுத்து எடுத்துக் கொடுக்கிறார்களோ அவர்களுக்கு ரூபாய் இருபத்தைந்து பரிசாகக் கொடுப்பேன்!" என்று சொன்னான்.



மறுநாள் ஒரு ஏழைப் பெண் தான் ஐந்நூறு ரூபாயை வழியில் கண்டெடுத்ததாகச் சொல்லி, பர்ஸுடன் பணத்தைக் கொடுத்தாள். லோபி தன் பணம் அகப்பட்டதைக் கண்டு குதித்தான். சட்டென்று கொஞ்சம் தயங்கினான். 'அடாடா! இதிலிருந்து எப்படி இருபத்தைந்து ரூபாய் எடுத்து இனாம் கொடுப்பது' என்று யோசனையில் ஆழ்ந்தான். தலையாரி, கொஞ்சம் கோபமாக, "ஓய்! நீங்கள் சொன்னபடி ரூபாய் 25ஐ உடனே அந்தப் பெண்ணிடம் கொடும்!" என்றான்.



"என்ன அயோக்கியத்தனம். நான் பர்ஸில் வைத்திருந்தது 525 ரூபாய். இந்தப் பெண் 25 ரூபாயை எடுத்துக்கொண்டு விட்டாள்!" என்று கத்தினான். தலையாரிக்குச் சட்டென்று ஒரு யோசனை தோன்றிற்று. "ஏ! லோபி. அது உன் பர்ஸ் இல்லை, உன் பர்ஸில்தான் 525 ரூபாய் இருந்ததாகச் சொன்னாயே. ஆகையால் அந்தப் பர்ஸை அவளே எடுத்துச் செல்லட்டும்!" என்று கூறிப் பர்ஸைப் பிடுங்கிப் பெண்ணிடம் கொடுத்தான். லோபி மயக்கம் போட்டு விழுந்தான்.










## 5. பூபதியின் சாமர்த்தியம்

பூபதி பீரோவுக்குப் பின்னால் பதுங்கி ஒரு நிமிஷங்கூட ஆகி இருக்காது. தடதட வென்று சேவகர்கள் அந்தக் கதவை இடித்தார்கள். உடனே தோழிப் பெண் கதவைத் திறந்து கொண்டு வந்து "யாரது?" என்று கேட்டபடி கதவைத் திறந்தாள். உள்ளே வந்தவர்கள் "இங்கு யாராவது வந்து கதவை இடித்துப் புகுந்து கொண்டானா? அவன் திருடன் மட்டும் அல்ல. அரசனையே கல்லால் அடித்து மண்டையை உடைக்கப் பார்த்தவன்!" என்றார்கள்.

அந்தப் பெண் 'அடாடா! நம்ம அரசரையா கொல்லப் பார்த்தான்! அட படுபாவி!' என்று அங்கலாய்த்துவிட்டு "அவன் இங்கு வந்ததாகத் தெரியவில்லையே, தாளிட்டிருந்த கதவை நான்தானே வந்து திறந்தேன்?" என்றாள்.

உடனே சேவகர்கள் வந்த வழியே தேடிக் கொண்டு போய் விட்டார்கள்.

கதவைத் தாளிட்டுவிட்டுச் சென்ற சேடி தான் கேட்ட விஷயத்தை அந்தப்புரத்திலுள்ளோருக்குச் சொல்ல அவசரமாக ஓடினாள்.

ஒளிவிடத்தை விட்டு மெல்ல வெளியே வந்த பூபதி சேடி சென்ற வழியே ஒளிந்து ஒளிந்து சென்று எப்படியோ அரசகுமாரியின் அறையை அடைந்துவிட்டான்.

பூபதி சென்ற சமயம் அரசகுமாரியின் அறையில் யாருமே இல்லை. அரசகுமாரி, பெரியராணி, மற்றச் சேடிகள் எல்லோரும் காயம் பட்ட அரசனைக் காண அந்தப்புரத்தை விட்டே சென்றிருந்தனர்.

சற்று நேரத்துக்கெல்லாம் அங்கே வந்த அநுராதா பூபதியைப் பார்த்ததும் திடுக்கிட்டு, "பூபதி, நீயா? நீ எப்பொழுது இங்கு வந்தாய்?" என்றாள் ஆச்சரியத்துடன்.

உடனே பூபதி அரசகுமாரியின் அருகில் வந்து நின்று, "அரசகுமாரி! இப்போது நான் சொல்லும் விஷயங்களுக் கெல்லாம் காரணம் கேட்கக் கூடாது. நான் சொல்லுவதை ராணியிடம் தெரிவித்து அப்படியே தவறாமல் செய்யச் சொல்லுங்கள். விடியற்காலம் நான் வந்து ராணியிடம் எல்லாத் தகவல்களையும் விவரமாகக் கூறுகிறேன். அரசரின் அறையில் ஒரு நீல நிற காகிதத் துண்டு கசக்கிப் போடப்பட்டிருக்கும். அதைப் பத்திரமாக எடுத்து வைக்கச் சொல்லுங்கள். மந்திரி கேட்டாலும் சரி, யார் கேட்டாலும் பாதிப் பழ ரஸம் குடித்த பிறகுதான் கையில் அடிபட்டுக் கோப்பை விழுந்து விட்டதாகக் கூறவேண்டும். பெரிய ராணியிடம் இவைகளைச் சொல்லித் தவறாமல் சத்தியமாகச் செய்யச் சொல்ல வேண்டும். இவ்விஷயங்கள் நான் சொன்னதாகவோ, என்னைப் பற்றியோ துளி வெளி வந்தாலும் என்னைக் கொன்றுவிடுவார்கள். அரசகுமாரி, பத்திரம்! என் உயிரும் அரசர் உயிரும் உங்கள் நம்பிக்கையில்தான் இருக்கிறது. நான் போகிறேன்" என்று கூறிவிட்டு முன் வாயில் வழியாகவே மந்திரியின் கண்களில் படாமல் சென்றுவிட்டான்.

அநுராதாவுக்கு ஒரே திகைப்பாகவும் பயமாகவும் இருந்தது.

தனது சூழ்ச்சி பலிக்காமல் அரசன் சாப்பிட்டுக் கொண்டிருந்த பழ ரஸம் கல்லால் அடிபட்டுக் கொட்டிச் சிதறிப் போனதைக் கண்ட மந்திரிக்கு அபாரமான கோபம். இரவு பத்து மணி வரையில் அரண்மனையிலேயே இருந்து அரசனை அடித்தவனைக் கண்டு பிடிக்கும்படி சொல்லிக் காத்திருந்தும் அவன் அகப்படவில்லை என்று சேவகர்கள் வந்து கூறிவிட்டனர். பிறகு மந்திரி மீண்டும் அரசனிடம் பேசிக் கொண்டிருக்கையில், "நீங்கள் பழ ரஸத்தை வாயருகில் கொண்டு போன பிறகு தானே கையில் கல் அடிபட்டது?" என்று விசாரித்தான் மந்திரி.

அரசன் "இல்லை. எடுத்தவுடனேயே குடிக்க ஆரம்பித்துப் பாதி குடித்த சமயத்தில்தான் கல்லு வந்து தாக்கிக் கோப்பையும் நழுவிற்று" என்று சொன்னான். பெரிய ராணி தான் அவனிடம் இப்படிச் சொல்லும்படி சொல்லி விட்டாளே!

அதைக் கேட்டதும் மந்திரியின் மனசில் சற்றுச் சமாதானம் ஏற்பட்டது. பிறகு மந்திரி அரசனிடம் விடைபெற்றுக் கொண்டு வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

பூபதி மெதுவாக மந்திரிக்குத் தெரியாமல் அரண்மனையை நோக்கிப் புறப்பட்டான். போகும்போது, நாம் சொல்லியபடி ராணி செய்திருப்பாளா? நம்மை அரசரும் ராணியும் நம்புவார்களா? என்றெல்லாம் பல பல யோசனை செய்தபடியே அரண்மனைக்குப் போய் ராணியின் அறையை அடைந்து ராணிக்கு வணக்கம் செலுத்தி மரியாதையாக நின்றான்.

பூபதி, "மன்னிக்கணும்! தாங்கள் நேற்று நான் அரசகுமாரியிடம் சொல்லிச் சென்றபடியே யாவும் செய்திருக்கிறீர்களா? அரசர் யாரிடமும் அப் பழ ரஸத்தைப் பாதிக் குடித்ததாகச் சொன்னாரா?" என்று மிகவும் ஆவலுடன் கேட்டான்.

ராணி, "ஆமாம். அரசரும் மந்திரியிடம் கூட அப்படித்தான் சொன்னார். அரசரின் அறையில் நசுக்கிக் கிடந்த அந்தச் சிறு துண்டு நீலக் கடிதம்கூடப் பத்திரமாகவே இருக்கிறது!" என்றாள்.

பூபதி "மகாராணி, அன்றொரு நாள் நான் தங்களிடம் ஒரு ஸீல் வைத்த கடிதம் கொடுத்தேனே, அதைத் தயவுசெய்து இப்போது உடைத்துப் பாருங்கள்" என்றான்.

ராணி உடனே தான் பத்திரப்படுத்தி வைத்திருந்த அக்கடிதத்தை எடுத்து வந்து உடைத்துப் பார்த்தாள். அதில் பூபதி வண்ணானிடம் வேலையாக இருந்தபொழுது மந்திரி வீட்டில் துணி எடுத்த சமயம் மந்திரியின் சட்டைப் பையிலிருந்து எடுத்த கடிதத் துண்டு இருந்தது. மேலப்பாலம் புளியமரத்தடியில் வந்து சந்திக்கும்படி வீரபத்திரன் எழுதிய கடிதம் தான் அது.

அதைப் படித்த ராணி "யாரையோ சந்தித்துப் பேச எழுதிய கடிதம் இது. இதிலிருந்து ஒன்றும் புரியவில்லையே!" என்றாள்.

பூபதி பிறகு கதை முழுவதும் சொன்னான். அரசனது அரண்மனையில் வெளிப்புறம் ஜன்னலருகில் செடியின் பின் மறைந்து நின்றதும், மந்திரி அரசனது பழரஸத்தில் விஷப் பொடியைப் போட்டதைக் கண்டு பயந்து எப்படியாவது அதை அரசன் சாப்பிடாமல் கொட்டச் செய்ய வேண்டுமென்று கல்லால் அடித்ததும், பிறகு தான் ஒளிந்து, தெய்வாதீனமாய்த் தப்பி அரசகுமாரியிடம் சொல்லிவிட்டுச் சென்றதையும் விவரமாகக் கூறினான்.

அதைக் கேட்ட ராணிக்கு ஆச்சரியமும் பயமும் மாறி மாறித் தோன்றின. தன்னுடைய ஒரே மகனான அரசனை விஷ விபத்திலிருந்து காப்பாற்றிய பூபதியிடம் சொல்லி முடியாத மதிப்பு உண்டாயிற்று. பூபதியின் நீட்சண்யமான சமயோசிதப் புத்தியையும், துணிகரமான நடத்தையையும் நினைத்துப் பூபதியிடம் நன்றிப் பெருக்கும், அபார நம்பிக்கையும் கொண்டாள் ராணி.

"பூபதி, நாங்கள் முற்றும் நம்பி இருக்கும் மந்திரியே இப்படிச் செய்தார் என்பதை என்னால் நம்ப முடியவில்லை" என்றாள் ராணி.

பூபதி "மகாராணி, தாங்களோ அரசரோ இதை நம்புவது கடினமானதுதான் என்று எனக்கும் பட்டதால்தான் மந்திரி விஷ மருந்து போட்ட கடிதத்தைக் கசக்கிக் கீழே எறிந்ததைப் பத்திரப்படுத்தச் சொன்னேன். அதை அரண்மனை வைத்தியரிடம் கொடுத்து இரகசியமாகப் பரிசோதித்துப் பார்க்கச் சொல்லுங்கள். அதில் துளி விஷப் பொடி இருந்தாலும் வைத்தியர் கண்டு பிடித்துவிடலாம். அதைக் கடிதத்தையும் பத்திரமாகவே வைத்திருங்கள். பிறகு அந்த வீரபத்திரன் விஷயம் வரும்போது அது ஒரு ருசுவாகும். இவற்றை எல்லாம் நினைத்தேதான் அந்தக் கடிதத்தை உங்களிடம் பத்திரப்படுத்தி விட்டேன். ஒரு மாத காலமாக இவ்வளவு விஷயங்களையும் மனதிலேயே வைத்து, திகிலுடனிருந்து வந்தேன். கடவுள் புண்ணியத்தில் அரசர் காப்பாற்றப்பட்டு விட்டார். உங்களிடமும் யாவற்றையும் விளக்கி ஒப்புவித்து விட்டேன். இப்பொழுது தான் என் பயமும் கவலையும் விட்டது" என்றான்.

பிறகு பூபதியை அரசனிருக்குமிடத்திற்குத் தானே அழைத்துச் சென்றாள் பெரிய ராணி. அரசன் பூபதியைக் கண்டதும் அன்



போடு வரவேற்றான். பெரிய ராணி பூபதியைப் பற்றிய எல்லா விவரங்களையும் அவனிடம் கூறியிருக்கிறபடியினால் அரசனுக்குப் பூபதியிடம் விசேஷ அன்பு ஏற்பட்டிருந்தது. அந்தச் சின்னப் பையனின் தைரியமான சாகசத்தினால்தான் தான் உயிர் தப்ப முடிந்தது என்பதை அறிந்துகொண்ட பிறகு அரசன் பூபதியிடம் வைத்திருந்த அன்பு இன்னும் அதிகமாயிற்று.

அரசனும் ராணியும் யோசனை செய்து பூபதியின் ஆலோசனையுடன் கூட அரசன் பொய்யாக நாளுக்கு நாள் உடம்பு அசௌக்கியம் என்று சொல்லி வரவேண்டுமென்றும், கடைசியில் ரொம்பவும் நோயுற்றவன் போல் படுத்துக் கொள்ள வேண்டுமென்றும் தீர்மானித்தனர். அப்பொழுதுதான் மந்திரி அரசனுக்கு வைத்தியம் செய்ய வீரபத்திரனை அழைப்பதையும் அப்பொழுது அவன் வந்து சதி செய்வதையும் அறியமுடியும்? அப்பொழுதானே மந்திரி மறுபடியும் அரசனைக் கொல்ல விஷம் கொடுக்காமல் இருப்பான்?

பூபதி, அரசர், ராணி முதலியோரின் அன்புக்கும் புகழ்ச்சிக்கும் பாத்திரமாகி மகிழ்ச்சியுடன் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டான்.

பூபதி மந்திரியிடம் போய் வணக்கத்துடன் நின்று, "நான் அரண்மனைக்குப் போயிருந்தேன். அரசருக்கு இரவில் வயிற்றுக் குமட்டலுடன் வாந்தி வரும்போலிருந்ததாம். ஆனால் வாந்தி பண்ணவில்லையாம். காலையில் மயக்கமாக இருப்பதாகப் படுத்துக் கொண்டிருந்தாராம்" என்றான்.

மந்திரியின் முகத்தில் மலர்ச்சி ஏற்பட்டது. "ஓஹோ! சரி போ" என்றான் சாந்தமாக.

பூபதியும் காம் சமயத்திற்குச் சொன்ன பொய் நன்றாக வேலை செய்கிறது என்று உள்ளுக்குள் சிரித்துக்கொண்டே தன் வேலையைக் கவனிக்கச் சென்றான். (தொடரும்)

# அவன் வேதனை

விஜயம்

சுந்தரத்துக்குக் கொஞ்ச நாட்களாக உடம்பு சரியாயில்லை. எப்போது பார்த்தாலும் சோர்ந்துபோய் அலுப்புத்தட்டி வீட்டுக்குள்ளேயே இருந்தான். யாருடனும் அதிகமாகப் பேசுவதில்லை. அவன் நண்பன் மணிக்குச் சுந்தரத்தை ஒரு மாதமாகப் பார்க்காதது என்னவோ போல் இருந்தது.

சுந்தரத்தைப் பற்றி விசாரித்ததில் அவனுக்குக் கொஞ்ச நாட்களாக உடம்பு சரியில்லை என்று தெரிய வந்தது. மணி உடனே சுந்தரத்தின் வீட்டுக்குப் புறப்பட்டுப் போனான்.

அங்கே அவன் கண்ட காட்சி அவனையே உலுக்கி விட்டது.

"சுந்தரம், உன் உடம்புக்கு என்ன? ஒரேயடியாக இளைத்துப் போய் விட்டாயே?" என்று மிகவும் அக்கறையாக விசாரித்தான் மணி.

"மணி, வா! உடம்புக்குப் பிரமாதமாக எனக்கு ஒன்றும் வந்து விடவில்லை. இப்பொழுது. இராத்திரி படுத்தால் தூக்கமே வருவதில்லை. ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது! பகல் வேளையிலாவது தூங்கலாமே என்றால் அதுவும் முடியவில்லை! என்னென்னவோ செய்து பார்த்தேன். இந்த வேதனை தீருகிற வழியாயில்லை! என்ன செய்யட்டும்! இராப் பகல் வேதனைப்பட்டுத் தவிக்கிறேன்!" என்றான் சுந்தரம்.

மணிக்கு இதைக் கேட்க மிகவும் வருத்தமாய்ப் போய் விட்டது.

"ஏன் அப்பா, சுந்தரம்! தூக்கம் வராத வியாதிக்கு மூலகாரணம் மண்டையில் ஏற்பட்டிருக்கும் உஷ்ணம்தான்! அந்த உஷ்ணம் தணியும்படியாக நல்ல தைலம் தேய்த்துக்கொண்டு ஸ்நானம் செய்வதுதானே!"

"இந்த வேதனைக்கு அதெல்லாம் ஒன்றும் சரிப்பட்டு வராது அப்பா!" என்றான் வறண்ட குரலில் சுந்தரம்.

"நாட்டு வைத்தியம் வேண்டாம் என்று தோன்றினால் இங்கிலீஷ் வைத்தியம் செய்து கொள்ளுவதுதானே?" என்று ஆதரவு கலந்த குரலில் கேட்டான் மணி.

"அதெல்லாம் ஒரு வைத்தியமும் பிரயோஜனப்படாது, அப்பா! யாராலேயும் இந்த வியாதியைத் தீர்த்து வைக்க முடியாது! எல்லோரும் உபயோக மற்றவர்கள்!" என்றான் சுந்தரம்.

உடனே மணி, "என்ன அப்பா, அப்படிச் சொல்லுகிறாய்! இந்த ஊரிலேயே மூன்று இங்கிலீஷ் டாக்டர்கள் இருக்கிறார்களே! அவர்களில் யாரையாவது பார்க்கப் படாதா?" என்று மிகவும் அங்கலாய்ப்போடு கேட்டான்.

"ஆமாம். அது சரிதான். நான் இராத்திரியெல்லாம் தூங்காமல் தவிப்பதற்குக் காரணம் அந்த மூன்று டாக்டர்களுக்கும் கொடுக்க வேண்டிய பணத்தை நினைத்துத் தானே? அப்படியிருக்க நான் அவர்களிடம் எப்படிப் போக முடியும்?" என்று கேட்டான் சுந்தரம்.

மணி அதற்குமேல் பேசுவதற்கு என்ன இருக்கிறது? நீங்களே சொல்லுங்கள்!

# அதிசய வீட்டுக்காரர்

## பரதேசி

அந்த வீட்டுக்கு நான் குடிபோன போது நான் கொடுத்த வாக்குமூலம் வெகு நீளம். வீட்டுக்காரர் குறுக்குக் கேள்வி கேட்கவேண்டிய அவசியமே ஏற்படவில்லை. நான் பாட்டுக்குச் சொல்லிக் கொண்டே போனேன்.

"இந்த வீட்டுக்குக் குடி வரப் போகிறவர்கள் நானும் என் மனைவி நாமுவும்தான். எங்களுக்குக் குழந்தை குட்டி கிடையாது. அவளுக்குப் பாடத் தெரியாது. அவள் மனம் ரொம்பவும் தாராளமானது. வீட்டுக்காரர்கள் எது இரவல் கேட்டாலும் உடனே கொடுத்து விடுவாள். பின்பு திருப்பிக் கொடுத்தாலொழியக் கேட்கவே மாட்டாள். அவள் அப்பா, அம்மா—யாரும் இங்கே வரமாட்டார்கள். அப்படி வந்தாலும் இரண்டு நாளுக்கு மேல் தங்க மாட்டார்கள். எனக்கு கவர்மெண்ட் உத்தியோகமில்லை. ஆனால் எங்கள் செட்டியார் ரொம்பவும் நல்லவர். முதல் தேதி ஞாயிற்றுக் கிழமையானாலும் சம்பளம் கொடுத்து விடுவார்.

"எனக்குச் சிநேகிதர்கள் யாருமில்லை. நான் யாரிடமும் கடன் வாங்கவில்லை. நான் இரவு இரண்டாவ் காட்சி சினிமாவுக்குப் போகும் வழக்கமில்லை. என்னிடம் ஹீட்டரோ எலெக்ட்ரிக் இஸ்திரிப் பெட்டியோ கிடையாது. நான் இந்த ஜன்மத்தில் ரேடியோ வாங்கப் போவதேயில்லை!...

"யார் கதவைத் தட்டினாலும் என் நாமுவே வந்து கதவு திறக்கும்படி ஏற்பாடு செய்கிறேன். நடுத் தெருவில் கோலம் போடும் வேலையையும், பால்காரி, தயிர்க்காரி வந்தால் கதவு கொடுக்கும் வேலையையும் என் நாமுவே கவனித்துக் கொள்வாள்.



"நீங்கள் சாப்பிடும் போது உங்கள் வீட்டு (ஓயாமல் அழுகிற) குழந்தைகளை என் நாமு அழாமல் பார்த்துக் கொள்வாள்! உங்கள் குழந்தைகளின் தலையலங்காரத்தை அவள் செய்து விடுவாள்!......

"ஆகையால்!......ஓய் வீட்டுக் காரரே!....... தயவு செய்து காலியாயிருக்கும் உமது 'மேல் மாடி'யை எனக்கு வாடகைக்குக் கொடுக்க வேண்டுகிறேன்!"

இப்படி நான் மூச்சு விடாமல் சொன்னதும் வீட்டுக்காரர் அயர்ந்து போய்விட்டார்.

"உங்களுக்கு வாடகைக்கு இடம் கொடுப்பது பற்றி ஆட்சேபம் ஒன்றுமில்லை. ஆனால் ஒரு சின்ன விஷயம்..." என்றார்.

"பரவாயில்லை! ...... எதுவானாலும் சங்கோசமில்லாமல் சொல்லுங்கள்!"

"அடுத்த வருஷம் இந்த வீட்டில் ரிப்பேர் வேலை செய்ய வேண்டுமென்றிருக்கிறேன். இன்று நான் குறைந்த வாடகைக்கு ஒப்புக் கொண்டு விட்டால் அப்புறம் நாளைக்கு அதிகரிக்க முடியாது......ஆகையால் ரூபாய் முப்பது கொடுத்து விடுங்கள்!"

"ஐயையோ!......முப்பது ரூபாயா!...... முதலில் இருந்தவர் பதினெட்டுத்தானே கொடுத்து வந்தாராம்!......"

"நீரும் வேண்டுமானால் அதே பதினெட்டுக்கு எழுதிக் கொடுக்கலாம். ஆனால் சொச்சம் பன்னிரண்டு ரூபாயையும் தனியாகக் கொடுத்துவிட வேண்டியதுதான்!"

கல்யாணமாகியும் பிரம்மசாரியாக 'அவள் அங்கே, நான் இங்கே' என்று இரண்டு வருஷம் கழிந்துவிட்டது. ஆகவே, வேறு வழி தோன்றாமல் அவர் கூறிய வாடகை கொடுத்து விட்டு அந்த வீட்டில் குடியேற நான் ஒப்புக்கொண்டேன்.

பிறகு முன்பு நான் வாக்குக் கொடுத்தபடி நாமுவையும் நடந்து கொள்ளச் செய்தேன்.

மாடிமேல் ஒரு குழாய் வைத்திருக்கிறார் எங்கள் வீட்டுக் காரர். அதில் விடியற் காலம் ஐந்து மணிக்கு இரண்டுசொட்டுக் கண்ணீர் ததும்பும். பின்பு 'கொர கொர' என்கிற சத்தத்தைத் தவிர வேறொன்றும் வராது. எனவே எல்லா உபயோகத்துக்கும் ஜலம் கீழே வீட்டுக்காரர் குடியிருக்கும் இடத்திலிருந்தே கொண்டுவர வேண்டியிருந்தது.

வீட்டுக்கார அம்மாள் பாத்திரங்களை யெல்லாம் குழாயடியிலேயே தேய்ப்பது வழக்கம். வீட்டுக் குழந்தைகளுக்குக் குழாய் என்றால் பிராணன்தான். குழாயடியில் விளையாடுவதில் அவைகளுக்கு அலாதி குஷி. போதாக் குறைக்கு வீட்டுக்காரம்மாள்—"அடி காமு! என் செல்லக் குட்டியைப் பாத்தியாம்மா!...... குழாய்வாயில் கை வைத்து ஜலத்தை யெல்லாம் பீருக்தாவன விளையாட்டு விளையாடுறாளும்!" என்று பெருமையாகச் சொல்லிக் கொள்வாள்.



சமையல் அறையில் நீர் அவசரமாகத் தேவையாயிருக்கும். ஆனால் குழாயடியில் ஜலக்ரீடை செய்து கொண்டிருக்கும் வீட்டுக்காரக் குழந்தைகளை விரட்ட காமு கொஞ்சங்கூடத் துணிய மாட்டாள்.

மளமளவென்று பக்கத்து வீட்டுக் கிணற்றிலிருந்து நான்கு குடம் ஜலம் கொண்டு வந்து விடுவாள். அப்போதும்கூட "அம்மா! நீ ஏன் கிணற்று ஜலம் கொண்டுவருகிறாய்?" என்று யாராவது கேட்டால் நிஜக் காரணத்தைச் சொல்லக் கூடாது!......"இன்னிக்கு எங்கள் கொள்ளுத் தாத்தாவின் திவசம்" என்று பொய்தான் சொல்ல வேண்டும்!

அடுத்தபடியாக விளக்கு விஷயம். இரவு பத்து ஆகிவிட்டால் வீட்டுக்காரர் மெயினை 'ஆப்' செய்து விடுவார். என் வெளி வேலைகளை முடித்துக் கொண்டு நான் வீடு திரும்ப மணி ஒன்பதரை ஆகிவிடும். செட்டியார் வீட்டுப் பேரேட்டுப் புத்தகத்தை இரவு பத்து மணிக்கு மேல்தான் நான் பதிய வேண்டியிருக்கும். நான் இதற்காக வீட்டுக்காரரிடம் தகராறு செய்வதில்லை. வாரம் ஒரு டஜன் மெழுகுவர்த்தி வீதம் நாலு டஜன் மாத ஆரம்பத்திலேயே வாங்கி விடுவது வழக்கம். இப்படி யெல்லாம் அடக்கம் காட்டியும்கூட வீட்டுக்காரர், நாங்கள் பகலில் விளக்குப் போடுவதாக ஆட்சேபித்து அதிகப்படியாக 'லைட்டு சார்ஜ்' வசூலிப்பதுண்டு.

இவ்வளவு தொல்லைகளிருந்தும் காமுவோ அல்லது நானோ அந்த வீட்டிலிருக்க நேர்ந்ததுபற்றி துளிக்கூட மனம் வருந்தியதில்லை!

இரண்டு வருஷ காலமாக "வீடு என்று ஒன்று கிடைத்தாற் போதும், விநாயகனே! உனக்கு நல்ல இடத்தில் பெண் தேடி விவாகம் செய்துவைக்கிறேன்!" என்று பிள்ளையாருக்கு ஆசை காட்டிச் சிரமப்பட்டுச் சம்பாதித்த இடமல்லவா அது?

இப்படியிருக்க, ஒருநாள் காலை எட்டு மணி இருக்கும். செட்டியார் வீட்டுக்குப் புறப்பட நான் தயாராயிருந்தேன். கீழேயிருந்து வீட்டுக்காரர் மேலே வந்தார். என்னவோ ஏதோ என்று நான் நடுங்கினேன். ஆனால் அவர் புன்னகை பூத்தபடியே வந்து எதிர் நாற்காலியில் அமர்ந்தார்.

"என்ன விசேஷம்? ஏதாவது வீட்டு மின்சார விளக்குச் சார்ஜு அதிகமாகி விட்டதா என்ன?"

"சே சே! அதெல்லாம் ஒன்றுமில்லை. வந்து...ஒரு மனிதன் தவறு செய்கிறான் என்று வைத்துக் கொள்வோம்! நாம் செய்வது தவறு என்று தெரிந்த பின்பு அதை உடனடியாகத் திருத்திக் கொண்டு விடவேண்டும், இல்லையா?" என்றார். இதைக் கேட்டதும் எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

"ஆமாம்! நான் ஒன்றும் அப்படித் தவறு செய்ததாக..." என்று பதக்து குழறினேன்.

"இல்லை இல்லை! தவறு செய்தவன் நான்தான்; அதை நான் உணர்ந்து கொண்டு விட்டேன். நீங்கள் இந்த வீட்டுக்கு வந்து ஆறுமாதம் ஆகிறதல்லவா? உங்களிடம் வாடகைப் பத்திரத்துக்குமேல் அதிகப்படியாக ரூபாய் பன்னிரண்டு வசூல் செய்தேன் அல்லவா? அந்த எழுபத்திரண்டு ரூபாய்க்கும், இதுவரை லைட்டு சார்ஜு என்று வசூல் செய்த ரூபாய் பதினெட்டுடன், அபராதமாக ரூபாய் பத்தும் சேர்த்து—ஆக நூறு ரூபாய்க்கு இதோ-இந்தச் செக்கைப் பெற்றுக்கொள்ளுங்கள்! என் தவறை மன்னித்துத் தயவு செய்து நான் நல்ல வீட்டுக்காரன் என்பதற்கு ஒரு அத்தாட்சிப் பத்திரம் கொடுங்கள்!" என்றார் வீட்டுக்காரர்.

என் தலை சுழல ஆரம்பித்தது. நடப்பதெல்லாம் கனவிலா—இல்லை—நனவிலா என்பது புரியவில்லை! வீட்டுக்காரரின் மூளை இப்படித் திடீரென்று கலங்கக் காரணம் என்ன என்றும் தெரியவில்லை!

"என்ன பாரு ஸார்! என்னை மன்னிக்க மாட்டீர்களா? என்னை நல்லவன் என்று ஒப்புக்கொள்ள மாட்டீர்களா?"

"எனக்கொன்றுமே புரியவில்லை, ஸார்! நீங்கள் நல்லவர் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன்! ஆனால் அப்படி ஒரு 'சர்டிபிகேட்' வழங்குமளவு எனக்கு யோக்யதை இல்லையே! வேறு யாராவதொரு செல்வாக்குப் பதிவுள்ள சர்க்கார் உத்தியோகஸ்தரிடம் வேண்டுமானால்......"

"இல்லை, இல்லை, பாலு ஸார்! நீங்கள் மனமார அப்படி ஒரு சர்டிபிகேட் வழங்கினால்தான் என் நெஞ்சு வேகும்!"

"ஐயையோ! இதென்ன அநியாயம்!" என்று உள்ளேயிருந்து காமு அலறினாள்.

நான் திடுக்கிட்டு எழுந்து சென்று உள்ளே பார்த்தால் வீட்டுக்கார அம்மாள் காமுவின் காலைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டிருந்தாள். "நீ மகராஜியா யிருக்கணும் அம்மா! என் தப்பெல்லாம் மன்னிச்சுடு! எப்படியாவது நீயும் உன் அகத்துக்காரரும் இந்த வீட்டிலேயே இருந்து வந்தால் அதுவே எனக்குப் போதும்!" என்று அந்த அம்மாள் கதறினாள்.

உலகில் எத்தனையோ மாறுதல்கள். திடீர் சம்பவங்கள் நிகழ்கின்றன. ஆனால் இப்படி ஒரு சம்பவம் நேருமென்று யார்தான் நினைக்க முடியும்?

கடைசியில் வீட்டுக்காரியின் விருப்பப்படி வீட்டுக்காரரின் நல்ல மனதைப் பற்றிப் பிரமாதமாக (எனக்குத் தெரிந்த வரையில்) புகழ்ந்து ஒரு சர்டிபிகேட் எழுதிக் கையெழுத்திட்டுக் கொடுத்தேன்.

ஆனால் என் முட்டாள்தனத்தை என்னவென்றுசொல்வது? என்னிடம் வீட்டுக்காரர் மன்னிப்புக் கோரி சர்டிபிகேட் வாங்கியது மனமாற்றத்தின் காரணமாக அல்ல. அன்று காலையில் வெளியான சர்க்கார் கெஜட் அறிக்கையின் காரணமாகத்தான்.

"அரசியல் தியாகிகளுக்கு நிலமான்யம் வழங்கும் திட்டம் இனிது நிறைவேறி விட்டது. இருக்க இடமின்றி நகரங்களில் தெருத் தெருவாக அலையும் மக்களுக்கு இருப்பிட வசதி செய்து கொடுத்த வீட்டுக்காரர்களும் கூடத் தியாகிகள்தான். ஆனால் அவர்களில் பெரும்பாலானவர்கள் குடியிருப்போரைப் பல வகையிலும் துன்புறுத்திப் பணம் வசூலிப்பதையே நோக்கமாகக் கொண்டவர்கள். ஒரு சிலர் மட்டுமே பிறருக்கு உதவ வேண்டும் என்னும் மனப்பான்மையினால் இடம் கொடுத்தவர்கள். அத்தகைய நல்ல வீட்டுக்காரர்களுக்குத் தலைக்கு இரண்டு ஏக்கரா வீதம் இடமான்யம் அளிக்க சர்க்கார் முன் வந்திருக்கிறது. குடியிருப்போரிடமிருந்து நன்னடத்தை சர்டிபிகேட் பெற்றவர்கள் மட்டும் விண்ணப்பிக்கவும்..."

★

இதற்குள் மச்சுப் படிகளில் டக் டக் என்று செருப்புக் காலுடன் ஏறி வரும் சத்தம் கேட்டது. என் தூக்கமும் சற்றுக் கலைந்தது. அது பூரணமாகக் கலைவதற்குள், "ஸார்! மாசம் பிறந்து ஐந்து தேதியாகி விட்டது. இன்னும் வாடகை தரவில்லையே" என்று கேட்டுக் கொண்டே வந்தார் வீட்டுக்காரர். நான் விழுந்தடித்துக் கொண்டு எழுந்திருந்தேன். நான் கண்டதெல்லாம் 'வெறும் கனவில் என்று அறிந்தேன்!

# மத்திய கேந்திரம்

ஜெயமணி

## டிரான்ஸ் ஜார்டன்

மதங்களுக்கும் மதப் போர்களுக்கும் பிறப்பிடமான பாலஸ்தீனத்தி லிருந்து புறப்பட்டு, இப்போது அதன் எல்லையை அடுத்துள்ள டிரான்ஸ் ஜார்டன் நாட்டுக்கு வந்திருக்கிறோம்.

இது பாலஸ்தீனத்தைப் போல் புராதனமான ஒரு தேசம் அல்ல. டிரான்ஸ் ஜார்டன் சமீப காலத்தில் பிரிட்டிஷாரால் சிருஷ்டிக்கப்பட்ட ஒரு தேசமாகும். முதலாவது உலக மகா யுத்தத்துக்குப் பிறகுதான் இந்த நாடு ஜனனமாயிற்று.

அதற்கு முன் இது பாலஸ்தீனத்துடன் சேர்ந்ததாக இருந்தது. இந்தப் பிரதேசம் பல நூற்றாண்டுகள் அன்னியர்களின் ஆட்சியில் இருந்து வந்தது.

வெகு காலத்துக்கு முன் இது கிரேக்கர்கள், ரோமியர்களின் ஆதிக்கத்தில் இருந்தது. 1188-ம் வருஷத்திலிருந்து சுமார் நானூறு ஆண்டுகள் வரையில் இந்தப் பிரதேசத்தில் எகிப்திய மன்னர்கள் ஆட்சி புரிந்தனர். அதன் பின் முதலாவது உலக மகாயுத்தம் முடியும் வரையில் இது துருக்கி சாம்ராஜ்யத்தின் கீழ் இருந்தது. அதன் பிறகுதான் இங்கு பிரிட்டிஷாரின் ஆதிக்கம் ஏற்பட்டது.

முதலாவது மகா யுத்தத்தின் போது அப்துல்லா குடும்பத்தினர் துருக்கியர்களுக்கு விரோதமாகப் பிரிட்டிஷாருடன் சேர்ந்து போர் செய்தனர். அவர்களுடைய தொண்டை மெச்சி அப்போது பிரிட்டிஷ் காலனி மந்திரியாக இருந்த வின்ஸ்டன் சர்ச்சில், அப்துல்லாவைத் டிரான்ஸ் ஜார்டனின் மன்னராகவும், அவரது சகோதரர் பெய்ஸலை ஈரான் நாட்டின் மன்னராகவும் நியமித்தார்.



மன்னர் அப்துல்லா

சிரியா, அரேபியா, பாலஸ்தீனம், ஈராக் இந்நாடுகளால் சூழப்பட்டுள்ள டிரான்ஸ் ஜார்டன் மிகச் சிறியது. சுமார் முப்பத்தையாயிரம் சதுர மைல் விஸ்தீரணம் கொண்ட இந்த நாட்டில் நாலு லட்சம் ஜனங்கள் கூட இல்லை. அதாவது ஜனத் தொகை சம்பந்தப்பட்ட வரையில் டிரான்ஸ் ஜார்டன் சென்னை நகரில் மூன்றில் ஒன்று கூட இல்லை! அப்படி யிருந்தும் இது தனி நாடாகப் பிரிக்கப்பட்டது! இது பிரிட்டிஷாரின் ராஜ தந்திரங்களில் ஒன்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

ஒரு தேசம் என்று ஏற்பட்டால் அதற்குரிய இலட்சணங்கள் இருக்க வேண்டும் அல்லவா? மிகச் சிறிய தேசமான டிரான்ஸ் ஜார்டனிலும் அந்த இலட்சணங்கள் பூரணமாக அமைந்துள்ளன!

மிகச் சிறியதான இந்த நாட்டில் கூட ஜனகாயகத்தை அடிப்படையாகக் கொண்ட பார்லிமெண்டை அமைக்க வேண்டும் என்று ஜனங்கள் கிளர்ச்சி செய்தனர். அந்தக் கிளர்ச்சியை நசுக்கத் டிரான்ஸ் ஜார்டன் அதிகாரிகள் சகலவிதமான அடக்குமுறைகளையும் கையாண்டனர்.

டிரான்ஸ் ஜார்டன் மன்னர் பிரிட்டிஷாரின் அந்தரங்க நண்பராக இருந்ததால், அவருக்குப் பிரிட்டிஷார் சகல உதவியும் அளித்து வந்தார்கள். சிரியா முதலிய நாடுகளையும் சேர்த்து அவரை மன்னராகச் செய்யவும் திட்டம் போட்டிருந்தார்களாம்.

1929-ம் வருஷம் பாலஸ்தீனத்தில் பிரமாதமான கலகங்கள் ஏற்பட்டபோது, பிரிட்டிஷாரையும் ஏற்கெனவே குறிப்பிடப் பட்டுள்ள பால்பர் பிரகடனத்தையும் எதிர்த்து டிரான்ஸ் ஜார்டனில் ஜனங்கள் கிளர்ச்சி செய்யத் தொடங்கினார்கள்.

பாலஸ்தீனம் அராபியர், யூதர்கள், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகள் இந்த மூன்று சாராரின் போர்க்களமாகி விட்டதால், சுற்று வட்டத்தில் உள்ள அரபு நாடுகள் எங்கு பாலஸ்தீனத்தில் யூதர்கள் அபரிமிதமாகக் குடியேறி அந்த நாட்டில் அவர்களின் ஆதிக்கம் ஏற்பட்டு விடுமோ என்று அஞ்சினார்கள். அத்தகைய நிலைமை ஏற்படாமல் தடுப்பதற்காக அராபியர்கள் கலகங்களில் ஈடுபட்டனர்.

மேற்படி கலகங்களில் அராபியர்களும் யூதர்களும் பரஸ்பரம் இழைத்த கொடுமைகளை விவரிப்ப தென்பது முடியாத காரியம். அந்த இரு சமூகத்தினரின் பயங்கரமான செய்கைகளைத் தடுப்பதற்காக பிரிட்டிஷார் இன்னும் அதிக பயங்கரமான காரியங்களில் ஈடுபட்டார்கள்!

இரண்டாவது மகா யுத்தத்தில் அரபு நாடுகளில் சில ஜெர்மனி முதலிய அச்சு நாடுகளுடன் உறவாட முற்பட்ட போது கூட, டிரான்ஸ் ஜார்டன் மன்னரான அப்துல்லா பிரிட்டனின் கட்சியைக் கைவிடவில்லை. பிரிட்டனின் உதவி

யைக் கொண்டு டிரான்ஸ் ஜார்டன், சிரியா, லெபனன் முதலிய நாடுகளைத் தம்முடைய ஆட்சியின் கீழ்க் கொண்டு வர வேண்டுமென்ற ஆசை மன்னர் அப்துல்லாவுக்கு இருந்தது.

பிரிட்டனின் மேற்பார்வையில் இருந்துவந்த டிரான்ஸ் ஜார்டனுக்கு 1946-ம் வருஷம் சுதந்திரம் கிடைத்தது. மன்னர் அப்துல்லா பிரிட்டனுக்கு விரோதமாக எக்காலத்திலும் நடந்து கொள்ள மாட்டார் என்ற உறுதிகொண்டு பிரிட்டிஷார் அந்த நாட்டுக்குச் சுதந்திரம் அளித்திருக்கலாம்!



ஜெருசலம் மப்தி

பாலஸ்தீனத்தில் அராபியர்களுக்கும் யூதர்களுக்கும் கடுமையான போர் மூண்ட போது, டிரான்ஸ் ஜார்டன் மன்னர் தமது எண்ணத்தை, தம்முடைய நாட்டை விஸ்தரித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ள முயற்சித்தார். பாலஸ்தீனத்தில் யூதர்களுடன் சமரசம் செய்து கொண்டு, சிரியா முதலிய நாடுகளைத் தம்முடைய ஆட்சியின் கீழ்க் கொண்டுவரப் பார்த்தார். ஆனால் அவரது முயற்சியை அரேபியா மன்னர் இபின் ஸாதும் எகிப்து மன்னர் பரூக்கும் கடுமையாக எதிர்க்கவே அப்துல்லாவின் ஆசை வெறும் கனவாகியது.

மன்னர் அப்துல்லா பாலஸ்தீன யூதர்களுடன் சமரசம் செய்து கொள்ள விரும்பியதற்காக, அவர் அரபு நாடுகளின் கண்டனத்துக்கும் அராபிய வெறியர்கள் அடங்கிய கோஷ்டியின் எதிர்ப்புக்கும் ஆளாக நேர்ந்தது. அதன் விளைவாகவே அவர் இறுதியில் உயிர் இழக்கவும் நேரிட்டது.

சுமார் மூன்று மாதங்களுக்கு முன் மன்னர் அப்துல்லா ஜெருசலத்தில் உள்ள ஒரு மசூதியில் பிரார்த்தனை செய்வதற்காகச் சென்ற போது அவரை ஓர் அராபிய வெறியன் சுட்டுக் கொன்றான். அவர் மாண்டதன் காரணமாக மத்திய கேந்திர நாடுகளில் பிரிட்டன் ஒரு சிறந்த நண்பரை இழந்தது.

மன்னர் அப்துல்லா கொலையுண்டதற்கு ஜெருசலம் அராபியர்களின் மதத் தலைவராக அதாவது மப்தியாக இருந்த ஹுஸேனி தான் மூலகாரணர் என்று பலமான வதந்திகள் உலாவின. பிரிட்டிஷார் தங்களுடைய ஜன்ம விரோதியான மப்தியை 1937-ம் ஆண்டில் நாடு கடத்தி விட்டார்கள். அவர் எகிப்து மன்னரால் ஆதரிக்கப்பட்டுத் தற்போது அந்த நாட்டிலேயே ஆடம்பரத்துடன் வசித்து வருகிறார்.

கொலையுண்ட அப்துல்லாவுக்குப் பிறகு அவரது இரண்டு புதல்வர்களில் யார் பட்டத்துக்கு வருவது என்பதன் சம்பந்தமாகச் சமீபத்தில் தகராறு ஏற்பட்டது.

அப்துல்லாவின் இளைய புதல்வரான நெயிப் பிரிட்டிஷாரின் நண்பர். மூத்த புதல்வரான தலால் பிரிட்டிஷாரின் பரம விரோதி என்று பெயர் பெற்றவர். போதாக் குறைக்கு அவர் சித்த சுவாதீனமின்றி ஜினிவாவில் உள்ள ஓர் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்தார். அவர் அராபியர்களிடையே அதிகச் செல்வாக்கு பெற்றவராதலால், அவரை அலட்சியம் செய்யப் பிரிட்டிஷார் துணியவில்லை.

மத்திய கேந்திர நாடுகளில் ஏற்கெனவே தங்களுக்கு விரோதமாக எழுந்துள்ள கொந்தளிப்பை இன்னும் முற்றவிட பிரிட்டிஷார் விரும்பவில்லை. அப்துல்லாவின் மூத்த புதல்வரும் அராபியர்களின் அன்புக்குப் பாத்திரருமான தலாலுக்குப் பட்டம் இல்லை என்றால் அரபு நாடுகளில் பிரிட்டிஷாருக்கு இருக்கும் எதிர்ப்பு அதிகமாகி விடும் அல்லவா?

எனவே கடைசியில் தலால்தான் சில வாரங்களுக்கு முன் டிரான்ஸ் ஜார்டன் மன்னராக முடிசூட்டப் பெற்றார். அவர் சிம்மாசனம் ஏறியதும், பிரிட்டன் விஷயத்தில் தம் தந்தை அனுஷ்டித்த கொள்கையையே தாம் பின்பற்றப் போவதாக அறிவித்தது பலருக்கும் ஆச்சரியத்தைக் கொடுத்தது.

டிரான்ஸ் ஜார்டனில் உள்ள ஜனங்களில் பெரும்பாலோரும் அராபியர்கள்தான் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. அவர்கள் இன்னும் நாகரிக வாழ்க்கையை அறியாதவர்களாக இருக்கிறார்கள்.



# அவன் சித்தி

## எஸ். வைத்தியநாதன்

தந்தையிடமிருந்து வந்த கடிதத்தைப் படித்த தியாகு ஆத்திரத்தால் துடித்தான். ஆத்திரம் உள்ளத்தில் புகுந்து விட்டால், அறிவு மங்கி விடுமல்லவா! நிதானமாக யோசனை செய்து பார்க்கும் சக்தி குறைந்து விடுமல்லவா! எனவே தியாகு தன் தந்தை தன்னிடத்தில் ஓர வஞ்சனையுடன் நடந்து விட்டார்; பட்சபாதமாக நடந்து விட்டார் என்று தீர்மானித்து விட்டான். அவர் மீது வெறுப்பும் குரோதமும் உண்டாகி விட்டது. தியாகுவின் மனத்தில் விஷம் புகுவதற்குக் காரணமான அவனுடைய தந்தையின் கடிதம் வருமாறு:

கடலூர், 25—5—1951

சிரஞ்சீவி தியாகுவுக்கு அநேக ஆசீர்வாதம். உபயக்ஷேமம்......

உன் தம்பி பாலு இந்த வருஷம் எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சையில் தேறி விட்டான். மேற்படிப்புக்காக அவனைக் காலேஜில் சேர்க்கவேணுமென்பது என் உத்தேசம். உனக்குத்தான் கலாசாலைப் படிப்பு இல்லாமல் போய்விட்டது. அவனாவது படிக்கட்டும். நம் குடும்பத்தில் அவன் ஒருவனாவது படித்துப் பட்டம் பெறட்டும் என்பது என் அவா. ஆகவே நீ அங்கு உனக்கு வேண்டியவர்களிடம் சிபார்சு பிடித்து, ஏதாவது ஒரு கலாசாலையில் அவனுக்கு இடம் கிடைப்பதற்கு முயற்சி செய்வாய் என நம்புகிறேன்.

உன் பிரியமுள்ள அப்பா,

கிருஷ்ணமூர்த்தி அய்யர்.

கடிதத்தை மீண்டும் ஒரு முறை படித்து விட்டு "அவசியம் சிபார்சு பிடித்துக் காலேஜில் அவனைச் சேர்க்க வேண்டியதுதான்!" என்று தனக்குள் கூறிக்கொண்டே கடிதத்தைக் கோபத்துடன் வீசி எறிந்தான் தியாகு.

'அவசியம் சிபார்சு பிடித்து விட்டுத்தான் மறு வேலை பார்க்கவேண்டும்! இந்த அப்பா என் விஷயத்தில் செய்த வஞ்சனைக்கு அவசியம் இந்தக் காரியத்தைச் செய்யத்தான் வேண்டும். அப்பாவா அவர்! என்னிடத்தில் துளியாவது வாத்ஸல்யம் உண்டா அவருக்கு! என்னைக் காலேஜில் சேர்த்தாரா! ஸ்கூல் பைனல் பாஸ் ஆனதும் 'ஒரு வேலையைப் பார்த்துக் கொள்' என்று சொல்லிப் பட்டணத்தைப் பார்க்க அனுப்பிவிட்டார். நம் தாயார் மாத்திரம் உயிரோடு இருந்திருந்தால் அவரோடு சண்டை பிடித்து நம்மைக் காலேஜில் சேர்க்கும்படி செய்திருக்க மாட்டாளா! நம் சித்தி தான் இருக்கிறாளே! அவள் நேர்மையானவளாக இருந்தால் நம்மையும் காலேஜில் சேர்க்க வேண்டும் என்று அப்போது சொல்லியிருக்க வேண்டாமா! இப்போது தன் பிள்ளையை மாத்திரம் காலேஜுக்கு அனுப்ப வேண்டும் என்று தோன்றவில்லையா! என்ன இருந்தாலும் அவளுக்கு மூத்தாள் பிள்ளைதானே நான்! எனக்கு மாற்றாந்தாய்தானே அவள்! எனக்கு நன்மை செய்ய வேண்டும் என்று அவள் கருதுவாளா! நான் நன்றாயிருக்க வேண்டுமென்று விரும்புவாளா அவள்! அப்பாவும் அவள் சொல்வது வேத வாக்கு என்று கருதிக்கொண்டு அவள் கீறிய கோட்டைத் தாண்டாமல் அவள் இஷ்டப்படி ஆடிக் கொண்டிருக்கிறார். என்னிடத்தில் வஞ்சனையுடன் அவர்கள் நடந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை யெல்லாம் தெரிந்துகொள்ள முடியாத அவ்வளவு மூட்டாள் நான் என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது! அவ்வெண்ணம் தவறு என்பதைச் சீக்கிரமே அவர்கள் உணர்ந்து கொள்ளும்படி செய்கிறேன். அவர்கள் முகத்திலேகூட இனிமேல் விழிக்கப் போவதில்லை. நமக்கும் அவர்களுக்கும் இத்துடன் உறவு விட்டது. அந்த வீட்டில் காலடி யெடுத்துவைக்கக்கூடாது இனி.—இந்த ரீதியில் ஓடின தியாகுவின் சிந்தனைகள்.

மூன்றாவது வயதிலேயே தாயை இழந்து விட்ட துர்ப்பாக்கியசாலி தியாகு. குழந்தையை வளர்ப்பதற்கு ஒரு பெண் துணை அவசியமாயிற்றே என்ற எண்ணத்தினாலேயே அடுத்த வருஷம் கல்யாணியை இரண்டாந் தாரமாக மணந்து கொண்டார், அவன் தந்தை கிருஷ்ணமூர்த்தி அய்யர். மூன்று வருஷங்கள் கழித்துக் கல்யாணி பாலுவைப் பெற்றெடுத்தாள்.

கல்யாணி மிகவும் உயர்ந்த குணம் படைத்தவள். தன் பிள்ளை, மூத்தாள் பிள்ளை யென்று லவலேசமும் வித்தியாசம் பாராட்டாமல் இரண்டு குழந்தைகளையும் சமமாகவே பாவித்தாள். இரண்டு பிள்ளைகளையும் இரண்டு கண்களாகவே கருதி நடத்தி வந்தாள்.

தியாகு எஸ். எஸ். எல். ஸி. பாஸ் பண்ணினான். அப்போது கடலூரிலுள்ள ஒரு கம்பெனியில் கிருஷ்ணமூர்த்தி அய்யர் ஒரு சாதாரணகுமாஸ்தா. அவர் வாங்கிக் கொண்டிருந்த சம்பளம் குடும்பக் காலட்சேபத்திற்கே சரியாக விருந்தது. பூர்விக சொத்து ஒன்றும் கிடையாது. இந்த நிலைமையில் தியாகுவை மேற்கொண்டு எங்ஙனம் படிக்க வைப்பது! எனவே ஏதேதோ சிபார்சுகளைப் பிடித்துத் தியாகுவுக்குச் சென்னைக் கம்பெனியொன்றில் வேலை பார்த்துக் கொடுத்து அவனைச் சென்னைக்கு அனுப்பினார்.

ஐந்து வருஷங்களாகச் சென்னையில் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டு, அதே ஹோட்டலில் அறை யெடுத்துக் கொண்டு வசித்து வந்தான் தியாகு. இன்னும் கலியாணம் ஆகவில்லை, 'வயது இருபத்திரண்டுதானே ஆகிறது! இன்னும் இரண்டு மூன்று வருஷங்கள் கழித்துத்தான் கல்யாணம்' என்று வந்த வரன்களை யெல்லாம் தட்டிக் கழித்துக் கொண்டிருந்தான்.

தியாகு சென்னைக்கு வந்த ஆறுமாதத்திற்கெல்லாம் கிருஷ்ணமூர்த்தி அய்யரின் பொருளாதார நிலைமையில் பெருத்த மாறுதல் ஏற்பட்டது. சாதாரண குமாஸ்தாவாக இருந்த அவர், திடீரென்று உதவி மானேஜர் பதவிக்கு இரு நூறு ரூபாய் சம்பளத்தில் உயர்த்தப்பட்டார். அடுத்த வருஷம் மானேஜர் பதவியும் கிட்டியது. அவருக்குச் சம்பளம் மூந்நூற்றைம்பது ஆயிற்று.

அவர் அந்தஸ்தும், செல்வ நிலையும் கணிசமாக அபிவிருத்தி யடையவே, பாலு ஸ்கூல் பைனல்

பரீட்சையில் தேறியவுடன் அவனைக் காலேஜில் சேர்க்க வேண்டுமென்று விரும்பினார் அவர். அதன்மேல்தான் அவர் தியாகுவுக்குக் கடிதம் எழுதி, யாராவது அவனுக்குத் தெரிந்த நண்பர்கள் மூலம், சென்னைக் காலேஜுகள் எதிலாவது பாலுவைச் சேர்ப்பதற்குச் சிபாரிசு பிடிக்கும்படி கூறியிருந்தார்.

தியாகு தகப்பனார் கடிதத்தின்படி எதுவும் முயற்சி செய்யவில்லை. தந்தைக்குப் பதில் எழுதவுமில்லை. அவன் உள்ளத்தைத்தான் துவேஷத் தீ பொசுக்கிக் கொண்டிருந்ததே, அவன் ஏன் கடிதம் எழுதுகிறான்! தன் வீட்டாருக்கும் தனக்கும் ஸ்னானப் பிராப்திகூட இனிக் கிடையாது என்றுதான் தீர்மானித்து விட்டானே அவன்! துவேஷ எரிமலையினால் எரிக்கப்பட்டுக் கொண்டிருந்த அவன் உள்ளத்தில், தான் ஸ்கூல் பைனல் படித்து முடித்தபோது தனக்குக் காலேஜ் படிப்பை யளிக்கக் கூடிய பொருளாதார வசதி தன் தகப்பனாருக்கு இருக்கவில்லையென்பதும், இப்போது கொஞ்சம் வசதி யுண்டாகி இருப்பதால்தான் பாலுவைப் படிக்க வைப்பதாகச் சொல்கிறார் என்பதும் தோன்றவே இல்லை. வஞ்சகியான மாற்றாந்தாய், அவள் துர்ப்போதனைக்காளாகி மூத்தாள் மகனுக்குத் துரோகம் செய்யும் தகப்பனார் ஆகிய காட்சிகளே அவன் மனத்தில் சுழன்று கொண்டிருந்தன. பாலுவின் மீது அவனுக்கு ஏற்கனவே யிருந்த வாஞ்சையை யெல்லாம் அவனுடைய மனதில் திடீரென்று ஏற்பட்ட குரோதமும் அசூயையும் மேலெழ முடியாமல் இதயத்தின் அடிவாரத்திலேயே அமுங்கிவிட்டன. மனித இதயத்தில்தான் துவேஷம் எவ்வளவு சீக்கிரம் புகுந்து விடுகிறது! நிர்மலமான மனசு படைத்த தியாகு கடிதத்தைப் படித்த கணமே யல்லவா அசூயைப் பேய்க்கு அடிமையாகி விட்டான்!

மூன்று நாட்கள் சென்றன. அன்று ஞாயிற்றுக்கிழமை. காலை ஏழரை மணி யிருக்கும். காப்பி சாப்பிட்டான பிறகு, தியாகு தன் அறையில் வந்து உட்கார்ந்து, தினசரிப் பத்திரிகை யொன்றை யெடுத்து வைத்துக் கொண்டு படிப்பதில் ஈடுபட்டான். அப்போது அவனுடைய அறையின் வெளியே யாரோ வரும் காலடியோசை கேட்டது. தலையை நிமிர்த்திப் பார்த்தான் தியாகு. அவன் தந்தைதான் வந்தவர். வியப்பும் திகைப்பும் அடைந்த அவன் மனங் குழம்பியவனாய் வாயடைத்துப் போனான். என்ன சோதனை இது! தகப்பனார் இருக்கும் ஊர்ப் பக்கமே திரும்பக் கூடாது; அவர் முகத்திலேயே விழிக்கக் கூடாது என்று உறுதியாகத் தீர்மானித்து விட்ட அவன் எதிரில் அவரே வந்து நிற்கிறார். அவரே வந்து அவன் முகத்தி லல்லவா விழிக்கிறார்!



அவன் திகைப்பை வேறுவிதமாக அர்த்தம் பண்ணிக் கொண்டார் கிருஷ்ணமூர்த்தி அய்யர். எதிர்பாராமல் தாம் வந்ததைக் குறித்துத்தான் அவன் வியப்பெய்தியிருக்கிறான் என்று நினைத்து ''ஏண்டா! கடிதாசு கிடிதாசு போடாமல் வந்து நிற்கிறேனே என்று பார்க்கிறாயா! ஆபீஸ் வேலையாய்த் திடீரென்று கிளம்பி வர வேண்டியிருந்தது. ஆகையினால்தான் உனக்கு இரண்டு மூன்று நாள் முந்தி எழுதிய கடிதத்தில் என் வருகையைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லை'' என்று கூறிக் கொண்டே உள்ளே வந்து நாற்காலியில் அமர்ந்தார். 'ஓஹோ' என்ற பதிலுடன் திருப்தி யடைந்தான் தியாகு. தன் வயிற்றெரிச்சல் எல்லாவற்றையும் கொட்டித் தீர்த்துவிட வேண்டும் என்று அவனுக்கிருந்த தாயினும் எப்படிச் சொல்வது, எவ்வாறு ஆரம்பிப்பது என்று தயங்கினான். பாலுவின் காலேஜ் 'அட்மிஷன்' விஷயமாகத்தந்தையே ஆரம்பிப்பார். அப்போது தன் உள்ளத்தில் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருக்கும் ஆத்திரத்தை யெல்லாம் கொட்டி, இரண்டில் ஒன்று தீர்த்துக் கொண்டு விடலாம் எனக் கருதி அத்தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

ஊர்க் கதையை யெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தார், கிருஷ்ணமூர்த்தி அய்யர். அசுவாரஸ்யத்துடன் கேட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தான் தியாகு. இனி எக்காலத்திலும் ஊரின் எல்லையையே மிதிப்பதில்லையென்று தீர்மானித்துவிட்ட அவனுக்கு அவ்வூர் விசேஷங்களில் என்ன சிரத்தை! ஊர் எப்படிக் குட்டிச் சுவராய்ப் போனாலென்ன!

ஏதேதோ கூறிவிட்டுச் சற்று நேரம் சென்று ''பாலுவின் 'அட்மிஷன்' விஷயமாக ஏதேனும் கவனித்தாயடா!'' என்றார் அவன் தந்தை.

சந்தர்ப்பம் வந்துவிட்டது என்று நிமிர்ந்து உட்கார்ந்தான் தியாகு. தைரியத்தை வரவழைத்துக் கொண்டான். தன் ஆத்திரக் கனலைக் கக்கத் தயாரானான். ''ஒன்றும் முயற்சி செய்யவில்லை...''

கிருஷ்ணமூர்த்தி அய்யர் இடைமறித்தார் அவனை. ''உனக்கு ஒழிவில்லை போலிருக்கு. அதுவும் நல்லதுக்குத்தான். வீணாகச் சிரமப்படுவானேன்! அவன் அட்மிஷன் விஷயமாக நீ ஒருவரையும் போய்ப் பார்க்க வேண்டாம்.''

திகைத்துப் போன தியாகு ''ஏன் நீங்களே ஏதாவது ஏற்பாடு செய்து விட்டீர்களா!'' என்றான் ஆத்திரத்துடன்.

''இல்லேடா! அவனைக் காலேஜிலேயே சேர்க்கப் போவதில்லை'' என்றார்.

தியாகுவினால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. ''ஏன் அப்பா! என்ன இப்படித் திடீரென்று!'' என்று வியப்புடன் வினவினான்.



விஞ்ஞான ஆசிரியர் (மிகவும் உற்சாகத்துடன்):—இன்றைய மனிதன் பறக்கக்கூடக் கற்றுக் கொண்டு விட்டான்! ஒரு பறவை செய்யக்கூடியதையெல்லாம் மனிதனும் செய்ய முடியும் என்று காண்பித்து விட்டான்...!

பையன்:— மனிதன் பறவையைப் போல் தந்திக் கம்பிகளின் மேல் உட்கார்ந்து கொண்டு கூவ முடியுமா, ஸார்?

"உன் சித்தி பாலுவைக் காலேஜில் சேர்க்க வேண்டாம் என்று ஒரே மூர்த்தண்ணியமாகத் தடுக்கிறாள். அதற்கு அவள் சொல்லும் காரணமும் விசித்திரமாயிருக்கிறது. உன்னைக் காலேஜில் படிக்க வைக்கவில்லையாம். பாலுவை மட்டும் படிக்க வைத்தால் ஊரில் நாலு பேர் 'மூத்தாள் பிள்ளையை 'ஸ்கூல் பைனல்' படிப்போடு நிறுத்தி விட்டான். தன் பிள்ளையை மாத்திரம் காலேஜுக்கு அனுப்புகிறேன்' என்று அவளை ஏசுவார்களாம். மூத்தாள் பிள்ளைக்கு வஞ்சனை செய்து விட்டாள் என்று பழிப்பார்களாம். நான் அவளுக்கு எவ்வளவோ சமாதானம் கூறினேன். 'ஊராருக்கென்ன!' அவர்கள் கண்டபடி பொறுப்பில்லாமல் ஏதாவது சொல்லிக் கொண்டுதானிருப்பார்கள். அதை யெல்லாம் பொருட்படுத்திக் கொண்டிருக்க முடியுமா! அப்போது நமக்கு வசதியில்லாததால் தியாகுவைப் படிக்க வைக்கவில்லை. அதனால் இப்போது சௌகரியமிருக்கும் போது இன்னொருவனைப் படிக்க வைக்கக் கூடாதா! இது தியாகுவுக்கும் தெரியும், அவன் பாலு படிப்பதைப் பற்றிச் சந்தோஷமே கொள்ளுவான், ஆட்சேபிக்க மாட்டான், அவனே வருத்தங்கொள்ள மாட்டான் என்பது தெரிந்திருக்கும் போது ஊரார் அபிப்பிராயத்தைப் பற்றி என்ன கவலை!' என்று கூறிப் பார்த்தேன். அவள் ஒரே பிடிவாதமாக இருக்கிறாள். தியாகு உத்தமமான பிள்ளை. அவன் ஒன்றும் வித்தியாசமாக நினைத்துக் கொள்ள மாட்டான் என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் அதற்காக நியாயமற்றது என்று நான் கருதும் இந்தக் காரியத்தைச் சற்றும் செய்ய விரும்பவில்லை. தியாகுவையும் பாலுவையும் நான் சமமாக வித்தியாசமின்றிக் கருதுகிறேன். எனவே தியாகுவுக்குக் கலாசாலைப் படிப்பை அளிக்காமல்—காரணம் எதுவாயினும் சரி...பாலுவுக்கு மாத்திரம் அளிப்பது பட்சபாதகமான செய்கை என்று எனக்குத் திடமாகத் தோன்றுகிறது. காலேஜில் படித்து விட்டால் மாத்திரம் பாலுவுக்கு என்ன பெருமை வந்து விடப் போகிறது! அதிர்ஷ்டமிருந்தால் இந்தப் படிப்பை வைத்துக் கொண்டே நிறையச் சம்பாதிக்கட்டுமே' என்று தீர்மானமாகக் கூறி விட்டாள். ஆகவே பாலுவைக் காலேஜில் சேர்ப்பதென்ற யோசனையை விட்டு விட்டேன்" என்று தீர்மானமாகக் கூறி கிருஷ்ண மூர்த்தி அய்யர் முடித்ததும் தியாகு அவமானம், வருத்தம், பச்சாத்தாபம் முதலிய உணர்ச்சிகளுக்கு வசப்பட்டுச் சிலை போல் நின்றான். அவன் மனத்தில் பெரிய மாறுதல் ஒன்று நிகழ்ந்து விட்டது.

*

'இந்தச் சித்தி எத்தகைய உத்தம குணம் படைத்தவள்! இத்தகைய பெருந்தகைமையுள்ள ஒருத்தியை எவ்வளவு கேவலமாக எண்ணி விட்டேன்! எனக்குத்தான் எத்தகைய அபசார புத்தி, எவ்வளவு அற்பத்தனம்; அவளைப் போன்ற ஒரு உத்தமியைப் பற்றிக் கதைகளில் கூட யாரும் படித்திருக்க முடியாதே! அவளுடைய பெருந்தன்மையான சுபாவத்திற்கும் என்னுடைய அற்ப புத்திக்கும் ஏணி வைத்தல்லவா பார்க்க வேண்டும்! மூத்தாள் பிள்ளை காலேஜில் படிக்கவில்லையென்பதற்காகத் தன் பிள்ளையும் படிக்கக் கூடாது என்று எந்தத் தாய் கருதுவாள்! அந்த உத்தமி நின்ற இடத்தில் நிற்க யோக்யதை இல்லாத கேவல புத்தி படைத்த நான் அவள் முகத்திலே இனி விழிக்கக் கூடாது என்று தீர்மானிக்க வேண்டும்! இத்தகைய மாற்றாந்தாய் ஒருத்தியை அடைந்த என்னைப் போன்ற பாக்கியசாலி யார்! அத்தகைய எண்ணங்கள் அவன் மனத்தில் ஓடின.

"அப்பா! இது என்ன பைத்தியக்காரத்தனம்! நான் காலேஜில் படிக்கா விட்டால் பாலுவும் படிக்கக் கூடாதா! அப்போதிருந்த குடும்ப நிலைமையில் என்னைப் படிக்க வைக்க முடியவில்லையென்பதற்காக பாலுவுக்கும் மேற்படிப்பு அளிக்க மறுப்பது நியாயமாகாது! நீங்கள் ஊருக்குப் போனதும் நான் சொல்லியதாகச் சித்தியிடம் கூறுங்கள், பாலுவைக் கண்டிப்பதாகக் கலாசாலையில் சேர்க்கத்தான் வேண்டுமென்று. நான் தக்கவர்களைப் பிடித்து 'அட்மிஷ'னுக்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனிக்கிறேன். சித்தி ஏதாவது ஆட்சேபனை செய்தால் மீண்டும் அந்த வீட்டில் நான் காலடி யெடுத்து வைக்க மாட்டேன்" என்று சொன்னதாகச் சொல்லுங்கள். பாலு காலேஜில் சேரவில்லையென்றால் தியாகுவை 'உயிரோடு இழந்துவிட வேண்டியதுதான் என்பதைக் கண்டிப்பாகச் சொல்லி விடுங்கள்" என்று உணர்ச்சி வசப்பட்டவனாகத் தியாகு கூறினான்.

கிருஷ்ணமூர்த்தி அய்யர் மகிழ்ச்சி மிக்கவராய் அவனைத் தழுவிக் கொண்டு, "அப்பா தியாகு! உன்னைப் போன்ற ஒரு சத் புத்திரனையும், கல்யாணியைப் போன்ற ஒரு மனைவியையும் அடைந்திருக்கும் என்னை விடப் பாக்கியசாலி யார்!" என்று நாத் தழுதழுக்கக் கூறினார்.

# ஆரோக்ய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 56. சாந்தி ஆசன பலன்கள்

சாந்தி ஆசனத்தின் முதல் படியைச் சரியாய்ச் செய்தபின்தான் இரண்டாவது படிக்குப் போக வேண்டும். எல்லா அவயவங்களும் தளர்ந்து விட்டதென்று நினைப்பு உண்டாகும். கவனித்துப் பார்த்தால் கால்கள் விறைப்பாய் விரல்கள் நீட்டி வைத்திருப்பர். சிலருக்கு இடுப்பு இறுக்கமாய் விறைத்திருக்கும். இதையெல்லாம் கவனித்து முதலில் சரிபார்த்துக் கொள்ள வேண்டும். சிலருக்குக் குதிகால்கள் ஒட்டினாற்போல் சேர்த்து வைக்க வேண்டுமானால் சற்று விறைப்பாய் வைத்தால்தான் முடியும். அப்பேர்ப் பட்டவர்கள் மூன்று நான்கு அங்குலம் இடைவெளி விட்டு இயற்கையான தளர்ச்சியுடன் வைத்துக் கொள்ளலாம். சிலருக்குக் கைகளை உடலைச் சேர்த்தாற்போல் தளர்த்தி வைக்க முடியாது. அவர்கள் சற்று தூரம் ஐந்தாறு அங்குலம் தள்ளி வைத்து, இயற்கையாய்த் தளர்த்தலாம். சிலரின் உடல் அமைப்பு மாறியும் இருக்கும். ஆனால் அதற்காக உடலை வளைத்து இஷ்டப்படி இருக்கக் கூடாது. முதுகெலும்பு, கழுத்து, சிரசு இவைகள் நேராய் இருத்தித் தளர்ந்துவிட வேண்டும். இது சரியாய் வந்தது என்பதற்கு அடையாளம் என்னவென்றால் சாந்தி ஜெபம் பண்ணும்போது யாராவது ஒரு காலையோ கையையோ பிடித்துத் தூக்கினால் அவை உங்கள் வசமில்லாமல் தளர்ந்து இருக்கும். இப்படிப் பூரண தளர்ச்சி கிடைக்கப் பல நாள், சிலருக்குப் பல மாதங்கள் கூட ஆகும்.

இம்மாதிரி தளர்த்துவதால் உண்டாகும் பலன் அபரிமிதம். நரம்புகள், தசைகள், இருதயம் முதலியவையெல்லாம் மட்டற்ற பலன் அடைகின்றன. நாம் கையையோ அல்லது எந்த பாகத்தையோ மடக்கினால் அங்குள்ள தசைகள் சுருங்குகின்றன. அந்தத் தசைகளிலுள்ள குளுகோஸானது மாறுதலடைந்து லாக்டிக் அமிலமெனும் விஷமாக மாறுகிறது. அவ்விஷத்தை மாற்ற பிராணவாயு வேண்டும். நாம் மீண்டும் மீண்டும் கையை அசைக்க அசைக்கப் பிராணவாயு நிறைந்த சுத்த ரத்தம் அவ்விடத்திற்குக் கொண்டுவர வேண்டும். அதற்குத்தான் நாம் சீக்கிரம் சீக்கிரமாகப் பெருமூச்சு வாங்குகிறோம். அடிக்கடி மடங்கின இடத்தில் வலிப்பதற்குக் காரணம் இந்த லாக்டிக் அமிலம் அதிகமாகி விடுவதினால்தான். இவை சிதைந்து கரியமிலமாகவும், நீராகவும் மாறுகிறது. அப்பொழுதுதான் ரத்தம் கெட்ட ரத்தமாக மாறுகிறது. அதிலுள்ள நீர், குண்டிக்காய்களில் சிறு நீராகப் பிரிந்து, பிறகு நுரையீரலில் கரியமலவாயு வெளியேறி, பிராண வாயுவினால் நிரப்பப்படுகிறது. இந்த வேலை நமது சரீரத்தில் இடைவிடாமல் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

நாம் முன் செய்த ஆசனங்களினால், உடல் அவயவங்கள் நீட்டியும், மடக்கியும் நிமிர்த்தியும் வேலை செய்தன. அதற்கெல்லாம் இந்த சாந்தி ஆசனத்தில் தளர்ச்சியைக் கொடுத்து அதற்குப் புத்துயிர் கொடுக்கப்படுகிறது. வளரும் குழந்தை ஒரு சிறு காரியம் செய்து விட்டாலும், பெற்றோர்களிடம் ஓடி வந்து பெருமையாய்க் காட்டும். அப்பொழுது அக்குழந்தை செய்த காரியத்தை மெச்சி நமது சந்தோஷத்தைத் தெரிவிக்க வேண்டும். அப்பொழுதுதான் குழந்தையின் மனம் வளர்ச்சி அடையும். அதைப்போலத்தான் நமது உடலும். இத்தனை நேரம் வளைத்து, நீட்டி, மடக்கிப் பல ஆசனங்களைச் செய்த தசைகளுக்குத் தளர்ச்சி கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் உடல் களைப்பு நீங்கி, உற்சாக மடைந்து, பூரண சக்தியும் பலமும் பெறும்.

தளர்ந்த தசைகளுக்கும் அவயவங்களுக்கும், பூரணமாய்ப் பிராணவாயுப் பாய்ச்சலை ரத்தம் அளித்து அதன் களைப்பைப் போக்குகிறது.

சாந்தி ஆசனத்தின் இரண்டாவது படி சுகமளித்தல், கஷ்டம் களைதல். இதனுடைய மகத்துவம் சொல்லில் அடங்காதவை. மனதால் ஆகாத காரியமில்லை என்பர். 'மனதின் வடிவமே மனிதன்' என்று மனுதர்ம சாஸ்திரம் சொல்லுகின்றது. மனதின் வலிமை மகத்தானது. மெஸ்மெரிஸ மென்பது அதன் ஆரம்பப்படி தான். காய்ந்த எண்ணெய்க் கொப்பரையில் குளித்த ஸ்நானம் பண்ணின பிரகலாதன் என்ன! விஷத்தை அமிர்தமாக அருந்திய மீரா என்ன! கல்லைக் கட்டிக் கடலில் பாய்ச்சியும், தெப்பமாக மிதக்க விட்ட திருநாவுக்கரசு என்ன! இவர்கள் எல்லாம் மனத்தை அடக்கின மகாத்மாக்கள். மனோ சக்தி நமக்குப் பழைய சொத்து. அது கவனிப்பாரற்றுக் கலைந்து போயிற்று. இன்று அமெரிக்கா போன்ற நாடுகளில் இதற்காகப் பல சங்கங்கள் அமைத்து ஆராய்கின்றனர். அவர்கள் வெளியிடும் ஆராய்ச்சிகளை அதாவது நமது பழைய சாஸ்திரத்தை விழுந்து விழுந்து படிக்கிறோம்.

இந்தக் காலத்தில் நாம் பி. ஏ. எம். ஏ. என்று படித்தவர்களைப் படிப்பாளிகள் என்கிறோம். நம் முன்னோர்கள் அக்காலத்தில் மனோ தத்துவத்தை உணர்ந்து, ஆத்மாவை அறியப் பல சாஸ்திரங்களைக் கற்று தேர்ச்சி பெற்றவனையே அறிந்தவன், உணர்ந்தவன், கற்றவன் என்றனர். இந்தக் காலத்தில் ஏட்டுக் கல்விக்கே மதிப்பு. உண்மை அறிவிற்கு ஆதரவு கிடைக்காமல் போய்விட்டது.

சாந்தி ஆசனத்தின் மூன்றாவது படியாகிய ஜெபம் செய்யும் பகுதியானது மிக அற்புதமானது. மந்திர சக்தி வாய்ந்தது. ஒவ்வொரு அவயவமாக நினைத்து, அதைப் புகழ்ந்து, கடமையை நினைவுறுத்தி, மனோசக்தி அளித்து, சாந்தி அளித்து அவைகளைத் தளர்த்தல் என்பது சுலபமாய்ச் செய்யக்கூடிய காரியமல்ல. ஏதோ! செய்து பாருங்கள். விரல்கள், பாதம், கெண்டைக்கால், முழங்கால், தொடை என்று நினைத்து வரும்போது, மனம் வேறிடத்திற்குச் சென்று எதை எதையோ நினைத்துக் கொண்டிருக்கும்.

சாதகர்கள் அப்படி விலகிச் செல்லும் மனதை மறுபடியும் திருப்பி, ''ஏ! மனமே! நான் எதற்காகப் படுத்திருக்கிறேன்! அதைக் கவனியாது நீ எங்கெங்கோ செல்கிறாயே! இனி இம்மாதிரி நடக்காதே. ஒழுங்காய் என்னிஷ்டம் போல் நட'' என்று மறுபடியும் கால் விரல் முதல் எண்ணி



கணவன்:—என் அன்பே, உனக்கு என் அன்புப் பரிசாக இந்த முத்து மாலையை வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன். அணிந்துகொள்!

மனைவி:—நான் ஒரு கார் வேண்டும் என்றல்லவா வெகு நாட்களாகக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். உங்களுக்கு ஞாபகம் இல்லையா?

கணவன்:—ஓ! பேஷாய் ஞாபகம் இருக்கிறது. கார் வாங்கலாம் என்றுதான் பார்த்தேன். ஆனால் இமிடேஷன் கார் கிடைக்கவில்லையே!

சாந்தி ஜெபம் அளிக்க வேண்டும். துடை பாகத்திற்கு வந்து மனம் வேறு விஷயங்கள் எண்ண ஆரம்பித்து விட்டது என்றால், விட்ட இடத்திலிருந்தே மறுபடி தொடரக்கூடாது. முதலிலிருந்து கால்விரலிலிருந்தே ஆரம்பித்துச் செய்ய வேண்டும். வயிற்று உறுப்புகளை நினைத்துக் கொண்டிருப்போம். மறுபடி மனம் வேறு விஷயங்களுக்குத் தாவத் தொடங்கிவிடும். அதைத் திருப்பி, அதட்டி, நல்ல புத்தி சொல்லி, மறுபடி முதலிலிருந்து ஆரம்பித்துப் பழக வேண்டும். இம்மாதிரி செய்யச் செய்யப் பல நாள், பல மாதங்களில் மனம் நம் இஷ்டம்போல் கால் விரலிலிருந்து ஆரம்பித்துச் சிரசுவரை விடாது நினைக்கப் பழகும்.

இந்த நிலையை நாம் அடைந்து விட்டாலே வாழ்க்கையின் லட்சியப் படிகளில் ஒரு அடி எடுத்து வைத்தவர்களாவோம். இப்படி பேறிய வர்களின் உடல், மனம், வாழ்க்கை எல்லாமுமே ஒரு வெற்றிச் சின்னமாக விளங்கும். முகத்தில் கடுமையான ரேகைகள் மறையும். சாந்தம் நிறைந்த ஆரோக்கிய ரேகைகள் பரவும். கோபம் அடங்கும். காமம் அடங்கும். எந்த விஷயமும் தன்னை மீறி நடப்பதென்பது இனி நடவாது. இச்சா சக்தி நாளுக்கு நாள் அதிகமாகும். பூரண புருஷனாய்த் திகழ்வான்.

நோயாளிகள் அவர்களுக்குத் தகுந்த ஆசனங்களைச் செய்து முடித்து, சாந்தி ஆசனத்தை விரலிலிருந்து நினைத்து வரும்போது, நோய் அல்லது வலி இருக்கும் பாகத்தை வந்தடைந்ததும், அங்கே மனதை ஐந்து நிமிஷங்கள் நிறுத்த வேண்டும். உதாரணமாக வயிற்று வலி உடையவர்கள் என்று வைத்துக் கொள்வோம். அவர்கள் அந்த இடத்திற்கு வந்ததும், "ஏ, வயிறே! நீ நோயற்று சுகமாய் வாழ்வாயாக! நோய் உன்னை இதோ விட்டு விலகிச் செல்லுகிறது. நோய் உன்னை அணுகாது. சுகமாய் இரு. நோயே ஓடு, விலகு!" என்று பன்முறை அவைகளையே திருப்பித் திருப்பி உச்சரிக்க வேண்டும். நோய் அவ்விடம் விட்டு விலகுவதாகவும், பிராணவாயுவுடன் இரத்தம் அவ்விடம் பாய்ந்து ஊடுருவிச் செல்வதாகவும், மனதினால் நினைத்துக் கொள்ள வேண்டும். இப்படிச் சில நாள் செய்து வந்தால் நோய் அவ்விடம் விட்டு விலகுவது தெரியும். சாந்தி ஆசனத்தில் சிறிது நேரமாவது மனதை நிறுத்தப் பழகினவரின் மனம், உடல், மற்றவரின் இஷ்டத்திற்கு அடங்காது. எந்த மெஸ்மெரிஸக்காரனும் வீழ்த்த முடியாது.

ஒரு நாள் ஒரு மாயாஜாலப் புலவர் என்னிடம் வந்தார். உலகெல்லாம் சுற்றுப் பிரயாணம் செய்தவர். பல மெடல்கள் பல நற்சாட்சிப் பத்திரங்கள் பெற்றவர். அமெரிக்கா சங்கங்களிலெல்லாம் அவருடைய திறமை மெச்சப்பட்டது. பூமியின் அடியில் பல நாள் பெட்டியில் அடைந்திருப்பார். எல்லாவற்றிற்கும் நற்சாட்சி, போட்டோ படங்கள் உண்டு. இங்கு சென்னையில் ஏதாவது ஒரு பெரிய சபாவில் அவர் திறமையைக் காட்ட ஏற்பாடு செய்வதற்காக என்னிடம் வந்தார். சில சில்லறை வித்தைகளையும் செய்து காட்டினார். மெஸ்மெரிஸத்தால் எல்லாரையும் வீழ்த்துவேன் என்றார்.

"உடனே எனக்கு ஒரு யோசனை தோன்றிற்று. இத்தனை நாளும் நாமும் ஆசனம், பிராணாயாமம், தியானம் முதலியவைகளைச் செய்கிறோமே. அதனால் நமக்குச் சிறிதாவது பலன் ஏற்பட்டிருக்கிறதா இல்லையா என்று சோதித்து விடவேண்டும். அதற்கு இதை விட வேறு சந்தர்ப்பம் கிடைப்பது அரிது" என்று தீர்மானித்தேன். "ஐயா! நீங்கள் சொல்வதெல்லாம் ஒப்புக்கொள்கிறேன். நீங்கள் முதலில் என்னை மெஸ்மெரிஸத்தால் வீழ்த்துங்கள். பிறகு சபாக்களுக்கு ஏற்பாடு செய்கிறேன்" என்றேன். அவரும் நானும் எதிர் எதிராக ஒரு பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டோம். முதலில் அவர் உதடுகள் அசைந்தன. இப்படி ஐந்து நிமிஷம் செய்தார். எனக்கு ஒரு மாறுதலும் ஏற்படவில்லை. பிறகு எனக்குக் கேட்கும்படி சொல்ல ஆரம்பித்தார். "இதோ நீ தூங்குகிறாய், நன்றாய்த் தூங்கு. ஆழ்ந்து தூங்கு. தூக்கத்தில் மூழ்கிப் போ. இதோ! தூக்கம் உன்னைக் கவ்வுகிறது. நீ அதில் வசப்படுகிறாய்!" என்று சொன்னார். பத்துப் பதினைந்து நிமிஷம் இதையே மாறி மாறிச் சொன்னார். ஒன்றும் மாறுதல் இல்லை. "நீங்கள் என்னையே பார்க்க வேண்டும்" என்றார். நான் பார்த்துக் கொண்டுதானே இருக்கிறேன் என்றேன். மறுபடியும் மேற் சொன்னதையே அவர் மனதின் வேகத்தைச் செலுத்தி உக்கிரமாகச் சொன்னார். ஆக அரை மணி நேரம் ஆயிற்று. ஒரு மாறுதலும் ஏற்படவில்லை. "இன்னும் பதினைந்து நிமிஷத்தில் நான் ஒரு இடத்தில் இருக்க வேண்டும், எனக்கு வேலை இருக்கிறது. நான் போக வேண்டும். மறுமுறை வாருங்கள் பார்க்கலாம்" என்றேன். அவர் "உங்களை வீழ்த்த முடியவில்லை. நீங்கள் என்னைக் காட்டிலும் மனோவலிமை அதிகம் படைத்தவர்கள். மனம் உங்கள் வசம் இருக்கிறது" என்றார். "சரி, இன்னொரு தடவை பார்ப்போம்" என்றேன். அவரும் விடை பெற்றுக் கொண்டு போனவர் மறுபடி வரவேயில்லை.

எனக்கு உள்ளுக்குள் ஒரே மகிழ்ச்சி. நாம் சாதாரணமாய் ஆசனம் பிராணாயாமம் செய்யும் போதே, நமக்கு இந்தச் சக்தி யிருக்கிறதென்றால், இன்னும் மேல்படிகளாகிய பிரத்யாகார, தாரணை, தியான, சமாதிகளில் என்ன விசித்திர சக்தி அடங்கியிருக்கும்! பெரியோர் சொல்லி வைத்ததில் பொய் இல்லை. ஆகையால் இனி இவைகளை விடவே கூடாது. முடிந்தால் மேல்படிகளுக்கும் போவது என்று தீர்மானித்துக் கொண்டேன். வாழ்க இச்சா சக்தி!

(தொடரும்)

# யசோதையின் காதலன்

கி.ரா. கோபாலன்

குழந்தைகளுக்குத் தங்கள் வருங்காலத்தைப் பற்றிப் பல கனவுகள் தோன்றுவது இயற்கை. எதிர்காலத்தில் தான் பெரியவனானால், எந்தத் தொழிலில் ஈடுபட வேண்டும், எப்படி எப்படிப் பட்ட உத்தியோகங்களை யெல்லாம் வகிக்க வேண்டும் என்றெல்லாம் ஆசைப்படுகிறார்கள் என்பது அவர்கள் நடைமுறையி லிருந்தும், விளையாட்டுக்களிலிருந்தும் தெளிவாகப் புலனாகும். அவர்கள் விளையாட்டும் அவர்கள் உள்ளக் கனவை ஒட்டினதாகத்தான் இருக்கும்.

ஒரு சிறுவன் தன்னைப் பெரிய டாக்டராக நினைத்துக் கொண்டு மண்ணை யெல்லாம் மருந்தென்று சொல்லிப் பொட்டலம் கட்டிக்கொடுத்துக் கொண்டிருப்பான். ஒரு குழந்தைக்குக் கோயில் அர்ச்சகனாக வேண்டுமென்று ஆசையிருக்கும். கண்ணால் கண்டதை எல்லாம் ஸ்வாமியாக எடுத்து வைத்துக் கொண்டு 'டும் டும்' என்று மேளம் கொட்டிக் கூத்தாடுவான். ஒருவன் தபால்காரனாகி வீட்டிலுள்ள பழைய கார்டுகளை எல்லாம் எடுத்து வைத்துக்கொண்டு 'சார், தபால்' என்று சொல்லிக் கொண்டு திரிவான். ஒரு பையனுக்கு வக்கீலாக வேண்டுமென்ற ஆசை. அப்பாவின் கருப்புக் கோட்டை எடுத்து மாட்டிக்கொண்டு கோர்ட்டுக்குப் போகிறேன் என்பான். இன்னொரு குழந்தைக்கு ஸ்டேஷன் மாஸ்டராக வேண்டுமென்று ஆசை இருக்கும். எப்பொழுதும் ரயில் கத்துவது போல் 'கீச்' சென்று கத்திவிட்டு, தானே சிவப்புக் கொடி, பச்சைக் கொடி யெல்லாம் காட்டிக்கொண்டே நிற்பான்.

இப்படி இளமையின் கனவுகள் பலவிதம். உயர்ந்த வேலையோ தாழ்ந்த வேலையோ அவர்களுடைய இளம் உள்ளங்களில் அதைப் பற்றிய வித்தியாசமே தெரிவதில்லை. அவைகளைத் தான் எப்படி அடைய முடியும் என்ற கவலையும் அப்பொழுது அவர்களுக்கு ஏற்படாது. ஆனால் அந்த ஆசை மாத்திரம் அவர்களை விடாது. முக்கால் வாசிக் குழந்தைகளின் ஆரம்ப ஆசையை அனுபவ அறிவே மாற்றி விடுகின்றது. டாக்டராக வேண்டுமென்று ஆசைப்பட்ட குழந்தை டாக்டராகி விடுவதில்லை பிற்காலத்தில். பஸ் கண்டக்டராக வேண்டுமென்று நினைத்த குழந்தை பஸ் கண்டக்டராவதில்லை. டாக்டராக வேண்டுமென்று நினைத்தவன் பஸ் கண்டக்டராகலாம். பஸ் கண்டக்டராக வேண்டுமென்று நினைத்தவன் டாக்டராகி விடலாம்.

எப்படியோ சில குழந்தைகள்தான் பிற்காலத்தில் தங்கள் குலத்திற்கும் குடும்பத்திற்கும் பெருமை வாங்கிக் கொடுக்கின்றனர். அநேக குழந்தைகளின் ஆவலெல்லாம் அவர்களுடைய பெற்றோர்களாலேயே பாழாகி விடுகின்றன. ஆனால் சாமிக் கண்ணுக்குச் சிறு குழந்தைப் பருவத்தில் இருந்த ஆசைதான், கடைசிவரையிலிருந்தது. அவன் தன்னுடைய நான்காவது வயதில்தான் பிற்காலத்தில் ஒரு போலீஸ்காரனாக விளங்க வேண்டுமென்று ஆசைப் பட்டான். அவனுடைய இருபத்திரண்டாவது வயதில் உண்மையாகவே அவன் ஒரு போலீஸ்காரனாகி விட்டான். ஆரம்பத்தில் அவன் சொந்த ஊரிலேயே உத்தியோகம் பார்க்கும்படி நேர்ந்தது.

சீனத்தூர் ஒரு கிராமமாகவோ பட்டினமாகவோ சொல்ல முடியாத ஒரு இரண்டுங்கெட்டான் ஊர். அதற்கு ஒரு சிறிய போலீஸ் ஸ்டேஷன். சப் இன்ஸ்பெக்டரைச் சேர்த்து மொத்தம் ஆறு பேர்கள்தான் வேலை பார்த்து வந்தனர். அவர்களில் சாமிக் கண்ணுவும் ஒரு சாதாரணப் போலீஸ்காரன்.

சாமிக்கண்ணுவின் வாழ்க்கை விருப்பம் என்னவென்பதற்கு அவனுடைய வாழ்க்கைச் சரித்திரமே ஆதாரம். சிறு வயதிலிருந்தே அவனிடம் ஒரு போலீஸ்காரனுக்குள்ள 'குணமும் நடத்தையும் இயற்கையாகவே படிந்திருக்கிறது என்பதை உணர்ந்தவர்கள் அவனுடைய போக்கை வித்தியாசமாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள். அவன் தான் ஒரு போலீஸ்காரன் என்பதில் அடையும் பெருமை இந்திர பதவி கிடைத்தாலும் அடைய மாட்டான். அவன் போலீஸ்காரனாவதற்கு முன்னாலிருந்தே தனக்குச் சுற்று வட்டாரத்திலிருந்தவர்களை யெல்லாம் ஒரு போலீஸ்காரனின் கண்களோடுதான் கண்காணித்து வந்தான். போலீஸாரின் கண் பார்வையே அலாதி அல்லவா! அதை உணர்ந்தவர்களுக்குத்தான் அதைப் பற்றி அதிகம் தெரியும். அவனுக்குப் போலீஸ் இலாகாவில் உத்தியோகம் கிடைப்பதற்கு முன்னாலிருந்தே ஒரு போலீஸ்காரருக்குள்ள அதிகார வரம்பு, சட்டத்தையும், அமைதியையும் பாதுகாப்பதற்கு வேண்டிய பொறுப்பு இவைகளை உணர்ந்தவன் போல் நடந்து கொள்வான்.

அவன் இளமைப் பருவத்தில் போலீஸ் வேலை எவ்வளவு எளிதானது என்று நினைத்தானோ அதற்கு நேர்மாறாக அவன் போலீஸ் உத்தியோகத்தை ஏற்றுக் கொண்டவுடன் அது எவ்வளவு கடினமானது என்று தெரிந்து கொண்டான். அவன் ஆரம்பத்தில் தன் சொந்த ஊரிலேயே வேலை ஒப்புக்கொண்ட பொழுது, அந்த ஊரை முன்பு இருந்ததை விட இன்னும் எவ்வளவோ உயர்ந்ததாகச் செய்து விடவேண்டுமென்ற துடிப்போடு இருந்தான். ஆனால் அவன் தனக்கு எந்த அளவுக்கு அதிகாரம் உண்டென்பதைச் சிறிது மறந்திருந்தான். குழந்தைகள் தெருவில் விளையாடுவதைக் கண்டால் அவனுக்குத் துளிக் கூடப் பிடிக்காது. அதனால் போக்கு வரத்துக்கு மிகவும் இடையூறு ஏற்படுகிறது என்பது அவனது அபிப்பிராயம். அவன் ஊரைச் சுற்றிச் சுற்றி வந்து தெருவில் விளையாடிக் கொண்டிருக்கும் குழந்தைகளை யெல்லாம் விரட்டுவான். எந்த வண்டியும் ரஸ்தாவில் அளவுக்கு மீறிய வேகத்தோடு போகக் கூடாது. அனாவசியமாக எவரும் எந்த இடத்திலும் நிற்கக் கூடாது. தனக்குள்ள அதிகாரத்தையோ, கடமையையோ எப்பொழுதும் எந்த சமயத்திலும் அவன் விட்டுக் கொடுத்ததில்லை. ஆனால் அவன் சட்டத்தையும் ஒழுங்கையும் இவ்வளவு தீவிரமாக இருந்து பாதுகாத்தது ஊரில் அநேகருக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும் என்ன செய்வது! அவன் ஒரு போலீஸ்காரன்.

சப் இன்ஸ்பெக்டர் தண்டாயுதத்துக்குச் சாமிக் கண்ணுவைக் கண்டால் பிடிக்காது. ஏனென்றால் அவன் கொண்டு வரும் வழக்குகளை யெல்லாம் அவரால் தள்ளவும் முடிகிறதில்லை; விசாரிப்பதும்



டாக்டர்:—ஏன் ஸார், ராத்திரியில் குளிர் ஜுரம் வருகிறது என்கிறீர்களே, அப்பொழுது உங்கள் பல் கட கடவென்று அடித்துக் கொள்கிறதா?

நோயாளி:—அது எனக்கு எப்படி ஸார், தெரியும்? நான் பல்லை அலமாரியில் அல்லவோ கழற்றி வைத்து விடுகிறேன்?

சங்கடமாய் இருந்தது. அவன் எதையும் யோசிக்காமல் செய்து விடுகிறான். அர்த்தமில்லாது பரபரப்படைகிறான் என்பது அவருடைய தீர்மானம். இப்படிப்பட்ட பதட்ட குணம் உள்ளவன் போலீஸ் உத்தியோகத்துக்கே தகுதியில்லை என்பதும் அவருடைய அபிப்பிராயம்.

அவனைப் பற்றி சப் இன்ஸ்பெக்டர் இத்தகைய தீர்மானம் செய்து வைத்திருந்தாரே தவிர அவன் எவ்வளவு ஒழுங்கானவன், திடசாலி, வேலையில் அவன் எவ்வளவு கண்ணாக இருக்கிறான் என்பதையெல்லாம் அவர் சிந்தித்ததே இல்லை. சாமிக்கண்ணுவின் ஒழுங்கும் கடமை உணர்ச்சியும் அவனை எவ்வளவு உயர்ந்தவனாக்கிவிடும் என்பதையும் அவர் அறிந்து கொள்ளவில்லை.

சப் இன்ஸ்பெக்டர் தண்டாயுதத்துக்கு ஊரில் நடக்கும் சிறு வழக்குகளையெல்லாம் விசாரிப்பதில் பிடித்தமே இல்லை. அந்த ஊரில் ஏதேனும் பெரிய கலவரம் ஏற்பட்டுப் பல கொலைகள் விழுந்து அந்த வழக்குகளையெல்லாம் சாமர்த்தியமாக நடத்திப் பெயரெடுக்க வேண்டுமென்ற ஆசை. பாவம்! அவருடைய ஆசை நிறைவேறவேயில்லை. அந்த ஊரில் கொலை, குத்து, கலவரம் ஒன்றும் ஏற்படாமல் அதி ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வந்தான் சாமிக்கண்ணு.

எங்காவது சிறு கலவரம் ஏற்படும்போலிருந்தாலும் 'போலீஸ்காரன் சாமிக்கண்ணு வருகிறான்' என்று சொன்னாலே எல்லாம் அடங்கி விடும். அவன் ஊரில் யாராக இருந்தாலும் தாட்சண்யம் காட்டுவதில்லை. ஒழுங்கு மீறி நடப்பவர்களைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்து வந்து விடுவான் சாமிக்கண்ணு.

சாமிக்கண்ணு சாதாரண போலீஸ்காரனாக இருந்தாலும் ஊரில் தன்னைவிட மதிப்புள்ளவனாய் விட்டதைக் கண்டு சப் இன்ஸ்பெக்டர் தண்டாயுதத்துக்குச் சிறிது பொறாமைகூட ஏற்பட்டது. அவர் சாமிக்கண்ணுவை எப்படி நினைத்தாலும் சாமிக்கண்ணு இல்லாமல் எந்தக் காரியமும் நடைபெறாது என்பதையும் உணர்ந்திருந்தார். அந்த ஊரிலும் சுற்றுப்புற கிராமங்களிலும் என்ன நடந்தது, என்ன நடக்கப்போகிறது, எங்கெங்கே சந்தேகப்படக் கூடிய மனிதர்கள் இருக்கிறார்கள் என்ற ரகசியமெல்லாம் சாமிக்கண்ணுவுக்குத் தான் தெரியும். ஏனென்றால் அவன் அந்த ஊரிலேயே பிறந்து வளர்ந்தவன். அவன் பிறவிலேயே ஒரு போலீஸ்காரன். அவனுடைய கண்கள்தான் அசல் போலீஸ்காரனுடைய கண்கள். அந்தக் கண்களுக்குத்தான் எல்லாம் விளங்கும்.

களத்தூருக்குச் சமீபமாக அரசாங்கத்துக்குச் சொந்தமான அரசங்காடு என்ற காடு இருந்தது. அதைக் காடு என்று சொல்வதைவிட மரங்களும் புதர்களும் அடர்ந்த ஒரு பெரிய தோப்பு என்று சொல்லலாம். அந்தக் காடு போலீஸாரின் கண்காணிப்பில் இருந்தது. நெடுநாட்களாக அந்தக் காட்டிலுள்ள மரங்களைச் சிலர் வெட்டி விறகுக்காக உபயோகித்து வந்தனர். இந்தச் சட்ட விரோதமான திருட்டு வழக்கமாக நடந்துவந்தது. இதைத் தடுக்க வேண்டுமென்று சாமிக்கண்ணுவின் நெடுநாளைய விருப்பம். ஆனால் சப் இன்ஸ்பெக்டருக்கு இந்த விவகாரத்தில் தலையிட இஷ்டமில்லை. அவர் பார்த்தும் பாராதது போல் தான் இருக்க நினைத்தார். பல சமயங்களில் அந்தக் காட்டில் விறகு வெட்டியவர்களைப் பிடித்து ஸ்டேஷனில் ஒப்புவித்த போதெல்லாம் சப் இன்ஸ்பெக்டர் அவர்களையெல்லாம் மன்னித்து அனுப்பி விடுவார். சப் இன்ஸ்பெக்டர் எப்படி நடந்து கொண்டாலும் சாமிக்கண்ணு தன் கடமையிலிருந்து துளிக் கூட நழுவுகிறதே இல்லை. அந்தக் காட்டை அடிக்கடி கண்காணிப்பதும், யாரையாவது அங்கிருந்து பிடித்துக் கொண்டு போய் சப் இன்ஸ்பெக்டர் எதிரில் நிறுத்துவதுமாய்த்தான் இருந்தான்.

அந்தக் காட்டிலிருந்து திருட்டுத்தனமாக மரங்களை அழித்து விறகு வெட்டிக்கொண்டு போவதற்கு ஆதார புருஷனாக உள்ளவன் யாரென்று சாமிக்கண்ணுவுக்குத் தெரியும். இதற்குக் காரணமாக உள்ள அந்த மனிதனைத் தகுந்த ஆதாரங்களுடன் பிடிப்பதுதான் சாமிக்கண்ணுவுக்கு முடியாத காரியமாக இருந்தது.

சின்னத்துரைத் தேவர் அந்த ஊரில் பெரிய மனிதர். பணக்காரர்—அவர் பெரிய மனிதர் என்பதோடு மட்டுமல்ல 'பெரிய போக்கிரி' என்றும் ஊரில் சொல்லிக் கொள்வார்கள். பெரிய மனிதர் போலிருக்கும் அவர்தான் அரசங் காட்டில் விறகுக் கொள்ளை நடத்தும் கோஷ்டிக்குத் தலைவர் என்று சாமிக் கண்ணுவுக்குத் தெரியும்.

இந்த விஷயத்தில் சப் இன்ஸ்பெக்டர் தண்டாயுதத்துக்குக் கூடச் சிறிது சம்சயம் உண்டு. ஆனால் சின்னத்துரைத் தேவர் சப் இன்ஸ்பெக்டரின் சகோதரியின் கணவர். இந்தக் காரணத்தால்தான் சாமிக் கண்ணு தீவிரமாக இருந்து சின்னத்துரைத் தேவரை நெருங்கிச் சட்டப்படி தனக்குள்ள அதிகாரத்தையும் கடமையையும் செய்ய முடியாமல் போய்விட்டது. எப்படி இருப்பினும் என்றோ ஒருநாள் கையும் களவுமாகச் சின்னத் துரைத் தேவரைப் பிடித்துப் போலீஸ் ஸ்டேஷன் வரையிலாவது கொண்டு போய் நிறுத்திவிட வேண்டுமென்பது அவனுடைய ஆவல். அதற்கப்புறம் சப் இன்ஸ்பெக்டர் தம் கடமையைச் செய்தால் செய்கிறார், விட்டால் விடுகிறார்! அவனுக்கு ஆகவேண்டியது என்ன!

களத்தூருக்குச் சமீபமாக உள்ள மதுராம் பட்டினம் என்ற ஊரிலே ரங்கசாமி என்பவன் விறகுக் கடை வைத்திருந்தான். அவன் சின்னத் துரைத் தேவரின் மருமகன். சின்னத்துரைத் தேவரின் மூத்த மகளைத்தான் அவன் கல்யாணம் செய்து கொண்டிருந்தான். ரங்கசாமி கான்ஸ்டேபிள் சாமிக் கண்ணுவின் சிநேகிதன். சாமிக் கண்ணுவுக்கு எப்பொழுதும் ரங்கசாமி பேரில்

ஒரு கண். அவன் கடையில் விற்கும் விறகெல்லாம் அரசங் காட்டிலிருந்து திருட்டுத்தனமாக வெட்டிக்கொண்டு வரப்பட்டவை என்பது அவனுடைய திடமான நிர்மானம்.

ரங்கசாமி கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவன். அவனுடைய யோக்யதைக்கு இந்த முதலில்லா வியாபாரத்தைவிடக் கண்ணியமான முறையில் முதல் போட்டு வியாபாரம் செய்யலாம். நல்ல அந்தஸ்துள்ள ரங்கசாமியும், பெருத்த பணக்காரராகிய சின்னத்துரைத் தேவரும் இப்படிப்பட்ட கேவலமான திருட்டுத் தொழிலில் இறங்கி இருப்பது அவனுக்கு மிகவும் வருத்தத்தை உண்டாக்கியது. ரங்கசாமி எப்படிப்பட்டவனாக இருந்தாலென்ன! சாமிக்கண்ணுவைப் பொறுத்த வரையில் குற்றம் குற்றந்தானே! இதனால் ரங்கசாமியைக் கூடக் குற்றவாளியாகப் போலீஸ் ஸ்டேஷனில் கொண்டு நிறுத்த வேண்டுமென்று சாமிக்கண்ணுக்கு அவா. அவன் ஒரு சாதாரணப் போலீஸ்காரன், கடமையை உணர்ந்து செய்யக்கூடியவன் என்ற தோரணையில் ஏற்படக் கூடிய சந்தேகங்களை ஆதாரமாகக் கொண்டு இப்படித் தானிருக்க வேண்டுமென்று முடிவு செய்தானே தவிர இந்தக் குற்றங்களைச் சின்னத்துரைத் தேவரும் அவருடைய மருமகன் ரங்கசாமியும் உடந்தையாக இருந்து செய்கிறார்கள் என்பதற்கு ஆதாரமான சாட்சியங்கள் எதுவும் அவனுக்கு அகப்படவில்லை. இந்தப் புலனை வைத்துக்கொண்டு தீவிரமாகக் குற்றத்தை நிரூபிக்கக்கூடிய சாதனங்களைத் தேடவேண்டிய வசதிகள் அவனுக்கு இல்லாமல் போனதற்குக் காரணம் சப் இன்ஸ்பெக்டரின் அசிரத்தையும் அலட்சியப் போக்கும்தான்.

• • •

ஒரு நாள் மாலை வேளை. சாமிக்கண்ணு அரசங் காட்டுக்குப் பக்கமாக உள்ள ரஸ்தாவழியாகப் போய்க் கொண்டிருந்தான். அப்பொழுது அவன் போலீஸ் உடையில் இல்லை. திடீரென்று காட்டிலிருந்து சலசலப்புச் சப்தம் கேட்டது. சட்டென்று ஓர் மரத்தின் மறைவில் நின்று கொண்டு கவனித்தான். காட்டுப் புதரிடையே உள்ள ஒற்றையடிப் பாதை வழியாக ஒரு பெண் வந்து கொண்டிருந்தாள். அவன் மரத்தின் மறைவிலிருந்து அவள் எதிரில் போய் நின்றதும் அவள் திகைப்படைந்து நின்று விட்டாள்.

சாமிக்கண்ணு, எப்பொழுதும் தனக்கே உரித்தான அதிகார தோரணையில் "ஏ! புள்ளே, அங்கேயே நில்லு!" என்று அதட்டினான். அவள் நடுங்கிக்கொண்டே அவன் எதிரில் வந்து நின்றாள். அவன் சட்டென்று தன் சட்டைப் பையிலுள்ள சிறிய நோட்டுப் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு "நீ யார்! உன் பெயரென்ன! எந்த ஊர்! உங்கப்பன் பெயரென்ன!" என்ற கேள்விகளை அவள் பதில் சொல்லுவதற்குக் கூட அவகாசம் கொடுக்காமல் சரமாரியாகக் கேட்டுக் கொண்டே போனான்.

அவன் பார்த்த பார்வையிலேயே அவனை ஒரு போலீஸ்காரன் என்று தெரிந்து கொண்ட அந்தப் பெண்ணுக்கு அவன் அவ்வளவு கேள்விகள் அதிகார தோரணையில் கேட்ட பின்பும் சந்தேகம் ஏற்படுமா! அவள் பயந்து நடுங்கிக் கொண்டே "என்னைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைச்சுக்கிட்டுப் போய்க் கொட்டடியிலே போடப் போறீங்களா!" என்று கேட்டுக் கதறினாள்.

அவள் இடையில் ஒரு சிறிய கூடை இருந்தது. சாமிக்கண்ணு அவளிடமிருந்து அந்தக் கூடையை வாங்கிப் பார்த்தான். அந்தக் கூடையில் பாதிக் கூடை மூந்திரிப் பழங்கள் இருந்தன. இந்த மாதிரி அவன் கையும் களவுமாக ஒரு பெண்ணை அது வரையில் பிடித்ததே இல்லை. சிறிய குற்றமானாலும் குற்றம் குற்றம் தானே! இன்று சிறிய குற்றம் செய்கிறவர்களை அப்படியே விட்டு விட்டால் நாளைய தினம் பெரிய குற்றங்களைத் துணிந்து செய்வார்கள். இதுதான் அவனுடைய கொள்கையின் மூல மந்திரம். அவள் ஒரு பெண் என்பதற்காக அவளை மன்னித்து விட முடியுமா! அவளுடைய முகத்தை உற்றுப் பார்த்தான்.

அவளுக்கு வயது இருபது இருக்கும். ஒரு கேசப் பிரி அவளுடைய அழகிய நெற்றியில் சுருண்டு விழுந்திருந்தது. அவளுடைய கவர்ச்சிகரமான முகம் கைதேர்ந்த சித்திரக்காரன் உன்னதமான அழகை மனசால் எண்ணி எண்ணி எழுதி வைத்த சித்திரம் போலிருந்தது. பெண்களின் கண்களில் இவ்வளவு காந்த சக்தி இருக்குமென்று அவள் கண்களைப் பார்த்ததிலிருந்து தான் சாமிக்கண்ணு தெரிந்து கொண்டான். மினுமினுப்பான நல்ல தேகக் கட்டு, பார்ப்பதற்கு நல்ல கருகருப்பும், திடமும் கொண்ட பெண் போலத்தான் தோன்றினாள். என்ன இருந்தாலும் ஒரு போலீஸ்காரரின் அதட்டல் குரலைக் கேட்டால் ஒரு பெண்ணுக்குச் சிறிதாவது அச்சம் ஏற்படத் தானே செய்யும்! ஒரு போலீஸ்காரர் அந்தக் காட்டில் நுழைந்த யாரையும் துளிக்கூடத் தாட்சண்யம் பார்க்காமல் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துக் கொண்டு போய் விடுவதாக அவள் கேள்விப்பட்டிருக்கிறாள். அதனால் அவள் மனதிலிருந்த தைரியம் அப்பொழுது சிறிது குன்றிப் போய் விட்டது. அப்பொழுது பயத்தின் அறிகுறி தோன்றிய அவள்





கிட்டு:—அம்மா, உன் நாட்டுப் பெண் ராஜத்தின் கண்ணில் படாமல் இந்தப் புஸ்தகத்தை எங்கே வைக்கலாம்?

அம்மா:—இது தெரியாதாடா, உனக்கு? நம்ம வீட்டுச் சமையல் உள்ளே போட்டு வையேன்!

முகத்தில் சிறிது சிரிப்புக் குறியும் தோன்றியது. இதற்குக் காரணம் ஆரம்பத்தில் சாமிக்கண்ணுவின் முகக் குறியில் எவ்வளவு கடுகடுப்பு இருந்ததோ அவையெல்லாம் அவள் முகத்தை அவன் பார்த்ததும் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து விட்டதுதான்.

திடீரென்று அவன் பார்வையில் ஒரு தணிவும் குளிர்ச்சியும் ஏற்பட்டது. அவளுக்கு அரை குறையாக இருந்த பயத்திடையே சிறிது அவனோடு பேசலாம் என்ற தைரியமும் ஏற்பட்டது. அவன் அவளை மேலும் போலீஸ் ஸ்டேஷன் வரையில் அழைத்துக் கொண்டு போய் அவமானப் படுத்தாமல் இருக்க வேண்டுமே! அதற்காகவாவது அவனோடு வார்த்தையாடிப் பார்க்க நினைத்தாள். இதற்கெல்லாம் அவள் அவனைக் கெஞ்ச வேண்டுமா! அவளுடைய அழகான முகமும் பார்வையுமே போதாதா! அதற்குத் தான் அவள் தன் முகத்தில் சிறிது புன்முறுவலை உண்டாக்கிக் கொண்டாள்.

அழகின் வசீகர சக்தி சாமிக் கண்ணுவின் இயற்கையான பிடிவாத சுபாவத்தைக் கூடச் சிறிது மாற்றி விட்டது. திடீரென்று அவனுக்கு அவள் மீது அர்த்தமற்ற ஒரு அனுதாபம் ஏற்பட்டது. இது விநோதம்தான். இத்தனை நாளும் எந்தப் பெண்ணும் ஓரே பார்வையில் அவன் மனதை இளக வைத்ததில்லை. அவன் அவள் கையிலிருந்து வாங்கிக்கொண்ட மூந்திரிப் பழக் கூடையை அவளிடமே திருப்பிக் கொடுத்து விட்டான், ஏதோ தன் கடமை எல்லாம் தீர்ந்து விட்டது போல். அவளும் இனிமேல் தன்னுடைய வழியைப் பார்த்துக்கொண்டு நடக்கலாம் என்ற எண்ணத்துடன் நடக்கலானாள். அவனும் மையல் கட்டுண்ட காவல் நாயைப் போல அவளைப் பின்தொடர்ந்து நடந்தான்.

"இந்தக் காடு அரசாங்கத்துக்குச் சொந்தம். இதுக்குள்ளே யாரும் நுழையக் கூடாது. இது உனக்குத் தெரியாதா!" என்றான் மெதுவாக அவளோடு நடந்து கொண்டே.

"எனக்கு எப்படித் தெரியும் அந்தக் காட்டிலே நுழையக் கூடாதுன்னு! ஊருலே தண்டோராப் போட்டாங்களா......!" என்றாள் யசோதை கேலியாகச் சிரித்துக் கொண்டே.

"தண்டோரா வேறு புதுசாப் போடணுமா! இதுதான் ஊருலே ரொம்ப நாளா எல்லோருக்கும் தெரியுமே......" என்றான் சாமிக்கண்ணு.

"எல்லோருக்கும் தெரியுமா! எனக்குத் தெரியாதே......!"

"தெரியாவிட்டால் பாதகமில்லே. அந்தக் காட்டிலே நீ நுழைந்தது கூடப் பாதகமில்லே. அங்கே யிருந்து இவ்வளவு மூந்திரிப் பழத்தைப் பொறுக்கி எடுத்துக்கிட்டு வந்ததுதான் சட்டப் படிப் பிசகு......" என்றான்.

"நான் என்ன சட்டத்தைக் கண்டேன்! சட்டப் படிப்பெல்லாம் படிச்சிருந்தா லல்லவா தெரியப் போகுது! காட்டிலே உதிர்ந்து வீணாய்த்தானே போகுதுன்னு பத்து மூந்திரிப் பழத்தைப் பொறுக்கிக்கிட்டு வந்தேன். இது ஒரு பெரிய குற்றமா!"

"குற்றம்தான். காட்டிலே உதிர்ந்து வீணாய்ப் போனாலும் போகலாம். சட்டப்படி காட்டில் நுழைந்து ஒருவரும் ஒரு சிறு துரும்பை எடுத்தாலும் குற்றம்தான். தெரியுமா......!" என்றான் கண்டிப்பான குரலில்.

"அது எனக்குத் தெரியாது. எங்கப்பாருதான் சும்மா இருக்கிற நேரத்திலே அரசங் காட்டிலே போய்ப் பத்து மூந்திரிப் பழம் பொறுக்கிக் கிட்டு வான்னு சொன்னாரு. அவருக்கு மூந்திரிப் பழம்ன்னா உசிரு......"

"உங்கப்பாரு சொன்னாரா! உங்கப்பா யாரு!" என்றான் ஆச்சரியத்துடன்.

"எங்கப்பாரு பேரு சின்னத்துரைத் தேவரு. நீங்கள்கூடக் கேள்விப்பட்டிருப்பீங்க. அவருடைய மூத்த மகளுக்குக்கூடப் போன வருசம் கல்யாண மாச்சு. நான் இளைய மகள். இப்போ நான் தான் வீட்டைப் பாத்துக்கிறேன்......" என்றாள் விஷமமாகச் சிரித்துக் கொண்டே.

இதைக் கேட்டதும் சாமிக்கண்ணு திடுக்கிட்டு நின்று விட்டான். "சின்னத்துரைத் தேவர் மகளா நீ......!" என்று கேட்டான்.

அவள் களுக்கென்று ஒரு தடவை சிரித்துவிட்டு "ஆமாம்! நீங்க ஏன் அவர் பேரைக் கேட்டதும் இவ்வளவு திகைப்படைந்து போயிட்டீங்க......!" என்றாள்.

அவன் சிறிது நேரம் அந்த வியப்பிலேயே மூழ்கி விட்டவன்போல் நின்றான். அவளுடைய தகப்பனாரைப் பற்றிப் போலீஸ்காரனாகிய அவன் என்ன நினைக்கிறானென்று அவளிடம் சொல்லி விட முடியுமா! அப்பொழுது அவளுடைய பெயரைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல்தான் அவனுக்கு அதிகமாக இருந்தது. "அதிருக்கட்டும் உன்னுடைய பெயரென்ன!"

"என் பெயரா......! அதைச் சொன்னால் நீங்க அதை உங்க நோட்டுப் புத்தகத்திலே எழுதிவிட மாட்டீங்களே! எனக்குப் போலீசுக்காரங்க என்றாலே பயம்......" என்றாள் பயந்தவள் போல்.

அவன் கேலியாகச் சிரித்துக் கொண்டே "நீ ஏன் போலீசுக்குப் பயப்படணும்! உங்க மாமா தானே இந்த ஊருலே சப் இன்ஸ்பெக்டராக உத்தியோகம் பார்க்கிறாரு...!" என்றான்.

"ஆமாம்! அவர் என்னுடைய சொந்தக்காரர் தான்......என் பெயர் யசோதை......உங்க பெயரென்ன......!"

"என் பெயரா......இருநூற்று அறுபத்து மூணு" என்றான் சாமிக்கண்ணு.

யசோதை ஹளுக்கென்று சிரித்தாள். "நான் அதைக் கேட்கல்லே. உங்க பெயரைத்தான் கேட்டேன்!"

"என் பெயர் சாமிக்கண்ணு."

"இந்தப் பெயராகத்தானிருக்குமின்னு நான் ஆரம்பத்திலிருந்தே தீர்மானித்து விட்டேன். இந்தப் பெயரோடே இந்த ஊருலே ஒரு போலீஸ்காரர் இருக்காருன்னு ரொம்பப் பேர் எங்கிட்டே சொல்லி இருக்காங்க!"

அவர்களிருவரும் இப்படிப் பேசிய வண்ணமே வெகு தூரம் நடந்து வந்து விட்டார்கள். அவள் தான் தன் வீட்டை நோக்கி வருகிறாள்! அவன் ஏன் தன்னுடைய வேலையை விட்டு விட்டு அவளைப் பின் தொடர்ந்து வந்தான் என்பது தான் விநோதம்.

"உன்னைப் போனால் போகிறது என்று இன்று விட்டு விடப் போகிறேன். இன்னொரு நாள் நீ இப்படிச் செய்தால் உன்னை விட்டு விடமாட்டேன். உன்னை ஸ்டேஷனுக்கே அழைத்துக்கொண்டு போய் உன் மாமா எதிரிலேயே நிறுத்தி விடுவேன். இதனால் அவருக்கும் சிரமம். எனக்கும் சிரமம்" என்றான் அவளுக்குக் கடைசியாக எச்சரிக்கை செய்வதுபோல்.

"இனிமேல் அப்படிச் செய்ய என்ன எனக்குப் பயித்தியமா...?" என்று சொல்லிக் கொண்டே அவள் முகத்தைத் தெரியாத புதிர் ஒன்றை அவனுக்கு விளங்க வைப்பது போல் பார்த்தாள். அவன் மனசில் சாமிக்கண்ணு செய்த எச்சரிக்கை சிறிது பயத்தை உண்டாக்கி இருக்கிறது என்பது அவளுக்குத் தெளிவாக விளங்கியது.

அவர்கள் இருவரும் எப்படியோ சின்னத்துரைத் தேவர் வீட்டை நெருங்கி விட்டனர். சின்னத்துரைத் தேவர் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தார். யசோதையும் போலீஸ்காரச் சாமிக்கண்ணுவும் சேர்ந்து பேசிக்கொண்டு வருவதைக் கண்டு திடுக்கிட்டார். ஆனால் தன்னுடைய வியப்பை ஒரு விதமாகச் சமாளித்துக் கொண்டு அவர்கள் சமீபமாக நெருங்கி வந்ததும், "நீ இந்த ஆசாமி கையிலே சிக்கி விட்டாயா! இந்த ஆசாமி யாராய் இருந்தாலும் போலீஸ் ஸ்டேஷன் வரையில் அழைச்சுக்கிட்டுப் போய் அதைக் காட்டி விட்டுத்தானே திருப்பி அனுப்புகிறது வழக்கம்!" என்றார் கேலியாகச் சிரித்துக் கொண்டே.

"இல்லேப்பா இவரு ரொம்ப நல்ல மனிதரு. நான் காட்டிலே புகுந்து மூங்கிரிப் பழம் திருடினேன்னு சொன்னாரு. ஏதோ அங்கே கிடந்ததைப் பொறுக்கிக்கிட்டு வந்தேனே தவிர திருடினதா என் மனசுக்கு ஏற்கப்படல்லே. என்னமோ என்னை மன்னிச்சுட்டாரு. என்னை வீட்டுக்குத் தனியாப் போகச் சொல்ல அவருக்கு மனசு வரல்லே. என்னை வீட்டு வரையில் கொண்டு வந்து விட்டுட்டு போகலாம்ன்னுதான் வந்திருக்காரு" என்றாள் ஒரு கோணல் சிரிப்பும் குறும்புப் பார்வையும் பார்த்துக்கொண்டே.

இதைக் கேட்டதும் சின்னத்துரைத் தேவர் சிரித்துக் கொண்டே "அப்படியா சமாசாரம்! வாங்க தம்பி. வீட்டு வாசப்படி வரையிலே வந்துட்டீங்க. கொஞ்சம் உள்ளே தான் வாங்க



கணவன் :—ஐம்பது ரூபாய்ப் புடவைதான் எனக்குப் பிடித்திருக்கிறது என்று சொல்லியும் நீ நூறு ரூபாய்ப் புடவையை வாங்கிக் கொண்டு விட்டாய்.

மனைவி :—உங்களுக்கு மன வருத்தம் எதற்கு? அதையும் எடுத்துக் கொண்டு விடுகிறேன்.

ளேன். கொஞ்சம் மத் தண்ணி குடிச்சிட்டு வெத்திலைப் பாக்கும் போட்டுக் கிட்டுப் போகலாம்'' என்று உபசரித்தான் சாமிக்கண்ணுவை.

உபசார வார்த்தைகளினுலோ, ஆதரவாகப் பேசுவதினுலோ எப்பொழுதும் சாமிக்கண்ணு பிறருக்குக் கட்டுப்பட்டு விடுவதில்லை. யசோதையின் அழகும் பேச்சும் அவனைச் சிறிது மயக்க வைத்தது என்பது உண்மை. ஆனால் சின்னத்துரைத் தேவரின் உபசார வார்த்தை அவனைக் கண் விழிக்கும்படிச் செய்துவிட்டது. ஒரு நிமிஷத்திற்குள் தன்னுடைய கடமை எதுவென்று அவன் உணர்ந்து விட்டான். ''அதெல்லாம் வேண்டாங்க. நான் போய் வரேங்க...'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினுன்.

''சரி! அதிகமா உபசாரம் செய்தா போலீஸ்காரரைத் தாஜாப் பண்ணறதா நினைச்சுக்குவாங்க. ஆனால் ஒரேயடியாய் மறந்து போயிடாதீங்க தம்பி! அடிக்கடி வந்து போயிட்டிருங்க...'' என்ருர் சின்னத்துரைத் தேவர், அவனிடம் அசாத்ய சினேகிதப் பற்று வைத்துள்ளவர்போல்.

''ஆகட்டுங்க!'' என்று சொல்லி விட்டுச் சாமிக்கண்ணு நடந்தான். அவன் சென்றபிறகு யசோதை தன் தகப்பனிடம் சாமிக்கண்ணுவைப் பற்றி வெகுவாக சிலாகித்துப் பேசிக் கொண்டாள்.

* * *

யசோதாவுக்கும் போலீஸ் சாமிக்கண்ணுவிற்கும் காதல்வளர்ந்தவிதம் இப்படித்தான். நாளுக்கு நாள் அவர்களுடைய மனக் காதல் வளர்ந்து பிரிக்க முடியாத ஒரு பந்தத்தில் கொண்டு வந்து அவர்களை நிறுத்தியது. காதல் ஒரு ஆணையும் பெண்ணையும் பித்தாக்கி விடுகிறது என்று சொல்வதைத் தவிர விசேஷமான அவ்விஷயத்தில் வேறொன்றும் சொல்லுவதற்கில்லை. எப்படியோ சாமிக்கண்ணுவும் யசோதாவும் அடிக்கடி சந்தித்துப் பேசுவது இயற்கையாகவும் விதியாகவும் போய் விட்டது. இந்த உலகத்தில் அவனுக்கு எல்லாவற்றிலும் உயர்ந்தபொருள் யசோதாதான்.

யசோதாவின் தகப்பன் சின்னத்துரைத் தேவருக்கும் அவர்கள் இருவருக்குமுள்ள காதல் தெரியும். அவனுக்கும் யசோதா சாமிக்கண்ணுவைக் கல்யாணம் செய்து கொள்வதில் திருப்திதான். அந்த இளமைப் பருவத்தில் தன் பெண் யசோதாவுக்கு ஏற்பட்ட ஆவல் இயற்கையானது என்பதையும் உணர்ந்தான். அந்தச் சிறிய ஊரில் போலீஸ் சாமிக்கண்ணுவைத் தவிர அவள் மனதைக் கவர்ந்தவர் வேறொருவரும் இருக்க முடியாது. அவளுக்குப் புருஷனாகத் தகுதி உள்ளவர்களும் வேறொருவரும் கிடையாது என்பது சின்னத்துரைத் தேவரின் அபிப்பிராயம்.

எப்படியோ சில மாதங்கள் ஓடிவிட்டன. சப் இன்ஸ்பெக்டர் தண்டாயுதத்துக்குச் சாமிக்கண்ணு அடிக்கடி சின்னத்துரைத் தேவர் வீட்டிற்குப் போவதும், யசோதா அவன்மீது காதல் கொண்டிருப்பதும், தேவர் அவனோடு அன்பாகப் பழகுவதும், அவனுக்கே யசோதாவைக் கல்யாணம் செய்து வைக்க நினைத்திருப்பதும் நன்கு தெரியும். அவருக்குச் சாமிக்கண்ணுவின் பேரில் நல்ல நம்பிக்கை இல்லாததால் இவையெல்லாம் பிடிக்கவில்லை. சின்னத்துரைத் தேவரிடம் சமயம் நேர்ந்தபொழுது தன் மனதிலுள்ள அபிப்பிராயத்தைச் சொல்லி வைத்தார். சாமிக்கண்ணு மிகவும் கண்டிப்பானவன். அவன் தான் கடமையை உணர்ந்து நடக்கிறோம் என்ற இறுக்கில் ஊரில் உள்ள பெரிய மனிதர்களை யெல்லாம் லட்சியம் செய்வதே இல்லை. மேல் அதிகாரிகளின் தயவையும் எதிர் பார்ப்பதில்லை. இதனால் அவன் ஒரு சாதாரணப் போலீஸ்காரன் என்ற நிலையிலிருந்து மேலே உத்தியோகத்தில் உயர்ந்த நிலைக்கு வருவது அசாத்யம்' என்று தன்னுடைய அபிப்பிராயத்தைத் தேவருக்குச் சொல்லி அவர் மனதைக் கலைத்துவிட முயற்சி செய்தார்.

தண்டாயுதத்தின் வார்த்தைகளைக் கேட்டுச் சின்னத்துரைத் தேவரும் சிறிது யோசிக்கத் தொடங்கினுர். ஆனால் அவர் சாமிக்கண்ணுவின் பேரில் வைத்திருந்த நல்ல நம்பிக்கையைத் தண்டாயுதத்தின் வார்த்தைகள் சிதற அடித்து விடவில்லை. எப்பொழுதும் போல் அவன் யசோதாவோடு வந்து பேசிக் கொண்டிருப்பதையும் தடுக்கவில்லை. எல்லாவற்றிற்கும் ஒரு வருடம் பொறுத்துப் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கலாமே என்பது அவருடைய எண்ணம்.

தன்னுடைய தகப்பனுரின் மனதை அறிந்து கொண்ட யசோதை அவருடைய நியாயமான முடிவு எப்படி இருக்கிறது என்பதைப் பொறுமையாய் இருந்து பார்க்க நினைத்தாள். இயற்கையாகத் தங்கள் குழந்தையின் எதிர்கால நலனைப் பற்றி நினைக்கும் பெற்றோர்கள் எதையும் சிறிது சிந்தித்துத்தானே செய்வார்கள். ஒரு பெண்ணின் மன ஆவலை நிறைவு செய்வதற்கு முன்னுல் அது நல்ல நிலைமையை ஏற்படுத்துமா என்று யோசிக்க வேண்டியதுதானே!

நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. வருடம் ஒன்று ஓடியது. சின்னத்துரைத் தேவர் கல்யாண விஷயத்தைப் பற்றிப் பேசவே யில்லை. ஒரு நாள் இரவு எதிர்பாராத வகையில் ஒரு ஆச்சரியமான நிகழ்ச்சி நடந்தது. அன்று திடீரென்று சப் இன்ஸ்பெக்டர் தண்டாயுதம் சாமிக்கண்ணுவை இரவு வேளையில் ஊரில் ரோந்து சுற்றி வரும்படி கட்டளை இட்டார். இதுவரை நாள் வரையில் அவனுக்கு இரவு வேலையே கொடுக்கப்பட்டதில்லை. இரவு ஊர் பாதுகாப்பிற்காகச் சுற்றி வரும் போலீஸ்காரருக்கு அன்று உடல் நிலை சரியாக இல்லாததால் அந்தப் பொறுப்பு அன்று அவன் தலையில் விழுந்தது. (அடுத்த இதழில் முடியும்)

## உங்கள் காலில் உள்ள

**Zam-Buk** தொந்தரவுகளை ஜாம்-பக்

## எவ்வளவு விரைவில் குணப்படுத்துகிறது என்று பாருங்கள் !





ஜாம்-பக் நோயுற்ற காலில் உள்ள புண்களை மாயமாய் மறையச் செய்கிறது.

உங்கள் கால்களில் ஜாம்-பக்கைப் போட்டுத் தேய்த்து விடுங்கள். வலி, அயர்ச்சி, நோய் எல்லாம் விரைவில் ஓடிப்போகும். ஹிதம் தந்து குணப்படுத்தும் சிறந்த ஔஷதத் தைலங்கள் ஜாம்-பக்கில் இருக்கின்றன. ஜாம்-பக் எரிச்சலையும், வீக்கத்தையும் போக்கடிக்கிறது. ஜாம்-பக் கொப்புளங்களை குணப்படுத்துகிறது. ஜாம்-பக் கால் ஆணியை அகற்ற உதவும். ஜாம்-பக் உங்கள் கால்வலிகளைக் குணப்படுத்துகிறது. மற்றும் நமைச்சல், இதர சரும நோய்கள், வெட்டுப் புண்கள், காயங்கள், புண்கள், ரணங்கள், நெருப்புக் காயங்கள், மண்டைச் சொறி, பூச்சிக்கடி மூலம் முதலியவற்றிற்கு ஜாம்-பக் உபயோகிக்கலாம்.



ஜாம்-பக் உலகத்தின் சிறந்த சரும ஆயின்ட்மெண்ட் மிருகக் கொழுப்பு கலப்பற்றது என்ற உத்தரவாதம்

FZY 3

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கோ., பி.டி. மதராஸ்




கேசவர்த்தினி அணா 14 : ஷாம்பு அணா 14 : தபால் செலவு வேறு : எங்கும் கிடைக்கும்.

**தென் இந்திய ரஸாயனசாலை, கோயமுத்தூர்**



அழகிற்கான அரிய சாதனம் 'ஓடின்'

*"OATINE CREAM is indispensable for my toilet. I have been using it for a long time, and find it delightful, and extremely necessary to preserve a perfect skin."*

*Sadhna Bose*

**Oatine**

*Snow*

01




**Oatine**

*Cream*

Make sure seal is unbroken



ஒரு அழகிய சிறுமி
பூரண லாவண்யவதியாகிவிடக் கூடும். டாம்கோ பரிமள காஸ்டர் கூந்தல் தைலமும் ஷாம்பூவும் வழக்கமாக உபயோகிப்பதால் செழிப்பான அழகிய கூந்தல் அவள் நிச்சயம் பெற முடியும்.
CASTOR HAIR OIL
A TATA PRODUCT
டாம்கோ பரிமள
காஸ்டர் கூந்தல் தைலம்
மற்றும்
தேங்காயெண்ணை ஷாம்பூ
தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்



எல்லா சரும வியாதிகளுக்கும்
ஜெர்மெக்ஸ்
ரணத்தை ஆற்றும் கிருமிநாசன களிம்பு
மருந்தை உபயோகியுங்கள்
எங்கும் கிடைக்கும்.
படை
Germex




டயபெப்ஸின்
ஆகாரம் சரிவர ஜீரணமாக டயஸ்டாஸ் பெப்ஸின் என்னும் இருவகைப் பொருள்கள் அத்யாவசியமானவை. இவைகள் இரண்டும் உயர்ந்த ரசாயன முறையில் சேர்ந்ததுதான் டயபெப்ஸின். ஆகாரத்துக்குப் பின் ஒரு டீஸ்பூன் டயபெப்ஸின் உட்கொண்டால் ஜீரணச் செயல் தக்ஷணமே ஆரம்பித்து, பாக்கி ஜீரண வேலை வயிற்றுக்கு மிக எளிதாகிறது. உங்கள் ஆகாரத்தின் முழுப் போஷணையும் அடைய இதுவே சிறந்த மார்க்கம்.
யூனியன் டிரக், கல்கத்தா
ஏஜண்டுகள்: அப்பா அண்டு கோ., மதராஸ்
மற்றும் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்
DIA-PEPSIN
UNION DRUG. CALCUTTA




Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

## மலேரியாவுக்குப் பின் உண்டாகும் பலஹீனத்தை ஏன்ஜியர்ஸ் போக்குகின்றது

மலேரியா, மற்றும் இதர ஜுரங்களுக்குப் பின் உண்டாகும் பலமின்மைக்கு ஏஞ்ஜியர்ஸ் எமல்ஷனில் (Angier's Emulsion) உள்ள இயற்கைச் சத்துக்கள் மீண்டும் பலத்தை ஊட்ட மிக இன்றியமையாததாக விளங்குகிறது. மிகவும் நம்பகமாக ஏஞ்ஜியர்ஸ் (Angier's) உட்கொள்ளலாம். அதன் சுவை குழந்தை முதல் பெரியோர்வரை யாவராலும் விரும்பப்படுகிறது.

எல்லா கெமிஸ்டுகளிடமும்
வியாபாரிகளிடமும் கிடைக்கும்




**ANGIER'S EMULSION**

---

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்

**சென்னை - நாகப்பட்டினம் - பினங்கு - சிங்கப்பூர்**

# S. S. "ரஜுலா"

சென்னை புறப்படும் தேதி — 1951 நவம்பர் 9உ
நாகப்பட்டினம் புறப்படும் தேதி — 1951 நவம்பர் 10உ

கப்பல் புறப்படும் தேதி காலை 6 மணிக்குமேல் சாமான்கள் ஏற்றப்படமாட்டா.

**கப்பலேறுவதற்கான ஏற்பாடுகள்:**

**சென்னையிலிருந்து 9-11-51:** பெர்த் வசதியற்ற பிரயாணிகள் காலை 10 மணிக்கும் ஸலூன் பிரயாணிகள் வைத்திய பரிசோதனைக்கும், கப்பலில் ஏறுவதற்கும் பகல் 12 மணி முதல் பகல் 1 மணிக்கு மேற்படாமல் வந்துவிட வேண்டும்.

**நாகப்பட்டினத்திலிருந்து 10-11-51:** பெர்த் வசதியற்ற டிக்கெட்டுள்ளோர் காலை 6 மணிக்கும் ஸலூன் டிக்கெட் உள்ளவர்கள் 8 மணிக்கும் கப்பலேறலாம்.

சென்னையில் ஏறும் பிரயாணிகள் 9-11-51 பகல் 1 மணிக்கு மேல் வந்தால், வைத்திய பரிசோதனைக்கு தாமதமாகிவிடும். ஆகையால் அவர்கள் கப்பலேற முடியாது.

பினங்கு, சிங்கப்பூர் துறைமுக சுகாதார விதிகளை அனுசரிக்க வேண்டியிருப்பதால் எல்லா பிரயாணிகளும் சர்வதேச சுகாதார விதிகளின்படி அமைந்த பாரத்தில் அம்மை குத்தியதற்கான சர்டிபிகேட்டும், காலரா எதிர்ப்பு இனாகுலேஷன் செய்ததற்கான சர்டிபிகேட்டும் பெற்று, ஒரு சர்க்கார் அல்லது முனிஸிபல் ஹெல்த் ஆபீஸரின் அத்தாட்சியுடன் செல்லும்படியாகக் கூடிய நிலையில் கொண்டுவர வேண்டும்.

| | |
|---|---|
| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட்<br>7, ஆர்மேனியக்காரத் தெரு, மதராஸ் | மதுரா கம்பெனி லிமிடெட்<br>முதல் லைன் பீச்ரோடு, நாகப்பட்டினம் |

